# ஸ்ரீகாளஹஸ்தி மகிமை

(ராகு - கேது க்ஷேத்ரம் -
ஸர்ப்பதோஷ நிவாரண ஸ்தலம்)

*ஆசிரியர் :*

**பவனி வள்ளி சத்யம்**

*வெளியீடு :*

**பவனி வள்ளி சத்யம்**

*''கல்பகா''*

*30, ராமானுஜம் தெரு,*

*தி. நகர், சென்னை - 600 017.*

முதற்பதிப்பு : 1996  2000 Copies


விலை : ரூ. 25

கிடைக்குமிடங்கள் :

1. பழனி வள்ளி சத்யம்
   30, ராமானுஜம் தெரு,
   தி. நகர், சென்னை - 600 017.

2. மாருதி பதிப்பகம்
   173, பீட்டர்ஸ் ரோடு,
   இராயப்பேட்டை, சென்னை - 600 014.

This book has been printed with the aid given by Tirupati Tirumala Devasthanams under their Scheme, "Aid to Authors - Financial Assistance for Religious Publications".

---

அச்சிட்டோர் :
ஸ்ரீ மாருதி லேசர் பிரிண்டர்ஸ்,
174, பீட்டர்ஸ் சாலை, சென்னை - 600 014.

# ஸ்ரீகாளஹஸ்தி மகிமை

## இந்நூலைப் பற்றி

ஸ்ரீகாளஹஸ்தி மிகப்புராதனமான ஸ்தலமாக அநேக புராணங்களில் இடம் பெற்றிருக்கிறது. மனதைக் கவரும் தென் கைலாச மலைச் சிகரமும், வடக்கு நோக்கிப் பாயும் ஸ்வர்ணமுகி ஆறும், இத்திருக்கோயிலில் அமர்ந்துள்ள ஸ்வயம்பு லிங்கமும் இப்புனித ஸ்தலத்தை மிகச் சிறப்பானதாக விளக்கச் செய்கிறது. அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் போன்ற பெரும் நாயன்மார்களால் பாடல் பெற்ற இந்த க்ஷேத்திரம் சரித்திரப் புகழ் பெற்றது.

இவ்வாலயத்தில் ஞானப்பிரசூனாம்பாள் சமேதராய் வீற்றிருக்கும் ஸ்ரீகாளஹஸ்தீஸ்வரர் கடலினும் மிக்க தன் அருளை பக்தர்களுக்கு வாரி வழங்கும் தன்மையவர். உருவமும், பெயருமற்ற இப் பெருமான் சிலந்திக்கும், பாம்புக்கும், யானைக்கும் காட்சியளித்து இவை மூன்றையும் ஒன்றாக முக்தியடையச் செய்து, அவ்வுருவங்களையும், அவற்றின் பெயரையும் தான் இணைத்துப் பெற்றுப் பரிமளித்து ஸ்ரீகாளஹஸ்தீஸ்வரர் என்ற பெயருடன் விளங்குகிறார்.

கண்ணப்பர் என்ற ஒரு வேடனின் முரட்டுப் பூஜையையும் பொருட்படுத்தாமல் அவனுடைய பக்தியின் ஆழத்தை மாத்திரம் உணர்ந்து அவனுக்கு மோக்ஷத்தையளித்து மிக உயர்ந்த ஸ்தானத்திற்கு கொண்டு சென்ற பெருமை இந்த ஈசனைச் சாரும். மேலும், நீலா என்ற தன் பக்தையைத் துரத்தி வந்த பேயை விரட்டித் தன் கருணையால் அவளைக் காப்பாற்றினார். சாபத்தினால் இடையில் ஊமையான பீமா என்ற புலவருக்குத் தன்னருளால் பேச்சு வன்மையை யளித்தார். ஈசனையே எதிர்த்து வாதாடிக் கொடிய தொழுநோயைத் தழுவிய நக்கீரரையும் காத்து ஆட்கொண்டார். ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் சம்ஸ்தானத்தில் ராஜ போகங்களை அனுபவித்து வந்த தூர்ஜட்டி என்ற கவிராயர் அவற்றையெல்லாம் வெறுத்து ஸ்ரீகாளஹஸ்தீஸ்வரரை பய பக்தியுடன் அணுகியபோது அவருக்குத் தேவையான மனநிம்மதியை அளித்தார். ஸ்ரீகாளஹஸ்தீஸ்வரரின் திருவருளைப் பெற்ற இந்த பக்தர்கள் எல்லோரும் இவரைத் துதித்துப் பாடினர்.

மேலும் மிருத்யுஞ்ஜய, சக்ரதாரா மன்னர்களுக்கு அவர்கள் இழந்த நாட்டைத் திரும்ப அடைய கருணை புரிந்ததோடு, வரகுண பாண்டிய மன்னனுக்குச் செல்வத்தையும், பத்மசேனா என்ற அரசனுக்கு மிகச் சிறந்த படைகளையும் அளித்தருளினார்.

கருணைக் கடலான ஈசன் தன் பக்தர்களுக்காக ஆலகால விஷத்தையும் அருந்தி தன் தொண்டையில் நிறுத்தி அவர்களைக் காத்தார். அவசியம் ஏற்பட்ட போது தக்ஷன் போன்ற தன் சுற்றத்தாரையும் கடுமையாகத் தண்டிக்கத் தயங்கவில்லை. இவ்வாறே தன்னைப் பூஜித்தவர்களையெல்லாம் ஆட்கொண்டு அப் பக்தர்களின் விருப்பங்களை தீர்த்தருளும் தெய்வமாக இக் காளஹஸ்தீஸ்வரர் விளங்குகிறார்.

பல நூற்றாண்டுகள் கடந்து வந்திருக்கும் இத் திருகோயிலைச் சுற்றிலும் பிரம்மாண்டமான கற்சுவர்களும், வானுயரக் கோபுரங்களும், அழகிய சிற்பங்களும் தோன்றியிருக்கின்றன. பல்லவ மன்னர்களும், தொண்டைமான்களும், சோழர்களும், யாதவர்களும், விஜயநகர சாம்ராஜ்ய சக்கரவர்த்திகளும் இக் கோயிலைக் கட்டி மகிழ்ந்தனர். நாட்டுக் கோட்டை வணிகர்களும் தங்களாலான பொருளுதவி செய்து இவ்வாலய திருப்பணியில் ஈடுபட்டனர். தென் கைலாச கிரியிலும், நடராஜ ரங்க ஸ்தலத்திலும் உள்ள சுவர் சிற்ப வேலைப்பாடுகள் மிக அற்புதமானவை.

பஞ்சபூத திருத்தலங்களில் ஒன்றான இது, வாயு லிங்கம் எனப்படுகிறது. சிறிதும் காற்று வீசாமலிருக்கும் கர்ப்பக் கிருகத்தில் உள்ள திருவிளக்குச் சுடர் தொடர்ந்து ஆடிக் கொண்டே இருப்பதால் இது வாயுலிங்கம் எனப் பெயர் பெற்றது. நவக்கிரகங்களில் ராகுவிற்கும், கேதுவிற்கும் இங்கே விசேஷ இடமுண்டு. இக் கிரகங்களின் ஆசி பெற்று பல கெடுதல்களிலிருந்து விடுதலைப் பெற 'சர்ப்ப சாந்தி' செய்விக்க ஏற்பாடுகள் செய்து தரப்படுகின்றன. இவ்வாலயத்திற்கு வரும் ஆயிரக்கணக்கான யாத்திரிகளை மகிழ்விக்க இக் கோயில் நிர்வாகம் சகல வசதிகளையும் செய்து தந்திருக்கிறது.

★

# முன்னுரை

''ஆலயம் தொழுவது சாலவும் நன்று'' என்பது தமிழ் மூதாட்டி ஔவையாரின் வாக்கு. நம் நாட்டின் ஆன்மீக பலத்திற்கும், மக்களின் மனநலத்திற்கும் அடிப்படையாக விளங்குவது ஆலயங்களே. ''கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என்ற பழமொழிக்கிணங்க கோயில்கள் நிரம்பியது நம் நாடு. அவற்றில் சிவாலயங்களும், விஷ்ணுவாலயங்களும், எண்ணிக்கையிலும், ப்ரஸித்தியிலும், மற்ற தேவாலயங்களை விட அதிகமானவை. அவற்றிலும் ஆழ்வார்களால் பாடப்பெற்ற விஷ்ணு ஆலயங்கள் ''திருப்பதிகள்'' என்கிற சிறப்புப் பெயர் பெற்ற 108 ஆலயங்கள் ஆகும். அதே போல் நாயன்மார்களில் முக்கியமான அப்பர், ஸுந்தரர், ஸம்பந்தர் என்ற மூவர்கள் பாடித் துதித்த சிவஸ்தலங்கள் 274. அத்தலங்களுள் மூவராலும் பாடப்பெற்ற சிறப்புத் தலங்கள் 44. ஸ்ரீ காளஹஸ்தி அந்த மூவராலும் பாடப்பெற்ற சிறந்த தலம்.

ப்ருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் என்ற ஐந்து பூதஸ்தலங்களில், 'ஸ்ரீ காளஹஸ்தி' வாயுஸ்தலம். இந்நகரில் சிறிது காலம் வசித்தாலே மோக்ஷத்தை அளிக்க வல்லது. (1) ஸ்ரீ காளஹஸ்தி-ஞானப்ரஸூனாம்பா-ஞானபீடம், (2) திருவெண்காடுப்ரம்ம வித்யாப்ரணவபீடம், (3) ஸ்ரீ சைலம்ப்ரமராம்பா-சைலபீடம். தேவித்ரய ஸ்தலங்கள் என்று ப்ரஸித்தி பெற்ற சக்தி பீடங்களில் ஒன்றான ஸ்ரீ காளஹஸ்தி ஞானபீடத்தில், அருளாட்சி புரிபவள், ஞானமே வடிவான 'ஞானப்ரஸூனாம்பிகை'. இது ஜாலந்தர பீடம் என்றும் ப்ரஸித்தி பெற்றுள்ளது. அம்பிகையின் சக்திகளை விளக்கும், ஐம்பத்தியொரு சக்திபீடங்களில் ஒன்று.

தென் கைலாயம் என்று புகழ் பெற்ற ஸ்ரீ காளஹஸ்தியையும், திருக்கைலையையும், திருஞானஸம்பந்தர் ஒரே பண்ணில், ஒரே வரியில் பாடினார். அப்பர் இத்தலத்தினை தர்சித்த உடனேயே கைலை யாத்ரையைத் தொடங்கினார். நக்கீரரின் ''கைலை பாதி காளத்தி பாதி'' என்ற அந்தாதி கைலையும், காளத்தியும் நிகர் ஒன்றே என்று விளக்கும். பரமசிவ பக்தனான அர்ஜுனன், மறுபிறவியில் கண்ணப்பராய் அவதரித்து, 'அன்பே சிவம்' என்ற அன்பு நெறியால் இறைவனை வழிபட்டு, ஆறே நாளில் முக்தி பெற்றார்.

ஸ்ரீ ஞானப்ரஸூனாம்பிகாவின் எதிரில், ஸ்ரீ சக்ரத்தை ப்ரதிஷ்டை செய்து, அன்னையின் சக்தியை ஒருமுகப்படுத்திய,

ஆதிசங்கர பகவத்பாதாள், தன்னுடைய சிவானந்தலஹரியில் காளத்தியப்பர், பக்தருக்கு இரங்கும் பரம கருணையைப் புகழ்ந்து பாடியிருக்கிறார்.

கண்ணப்பரின், வழி நடந்து தேய்ந்த செருப்பு, சிவலிங்கத்தின் கண்ணின் மீது இடம்பெற்றது. வாயிலிருந்து, கொப்பளித்த நீர் முப்புரமெரித்த பரமனுக்கு தெய்வத்தன்மை பொருந்திய அபிஷேக நீராயிற்று. கொஞ்சம் கடித்துப் பார்த்து சுவைத்த மாம்ஸம் புதிய நைவேத்யமாயிற்று. காட்டில் வசிக்கும் வேடன், பக்த ச்ரேஷ்டனாகிறான் என்று கண்ணப்பரின் பக்தி விளைத்த அற்புதத்தை பரமசிவனின் அவதாரமான சங்கரர் புகழ்கிறார்.

இப்படி நாயன்மார் மூவரும், ஆதிசங்கரரும் பாடிய பெருமையுடன், மாணிக்கவாசகரும், தன் திருவாசகத்தில் ''செருப்புற்ற சீரடி வாய்க்கலசம் ஊனமுதம்'' என்று காளத்தியப்பரின் கருணையை வியந்து போற்றியிருக்கிறார்.

இவ்வூரினை அணைத்து ஓடும் ஸ்வர்ணமுகி நதியோ, அகத்தியரின் தவப்பயனாக புனிதமான தென் கைலையை மேலும் புனிதப்படுத்த வந்த கங்கையேயாகும்.

நவக்ரஹ க்ஷேத்ரங்களுள் இது ராஹு, கேது க்ஷேத்ரம், ராஹு, கேது தோஷம் மற்றும், ஸர்ப தோஷங்களுக்கு நிவாரணம் காளத்தியப்பரின் ஸந்நிதியில் கிடைக்கின்றது என்பது கண்கூடு.

இப்படி மூர்த்தி, தலம், தீர்த்தம் என்று எல்லா வகையிலும் பெருமை பெற்றதும், பக்தர்கள் குறைகளை குழி தோண்டி பூமிக்கடியில் புதைப்பேன் என்பது போல, பூமிக்கடியில் கோயில் கொண்டுள்ள ''பாதாள விநாயகர்'', பக்தியின் பெருமையை எடுத்துக் காட்ட கண்ணப்பர், சிலந்தி, நாகம், யானை இவர்களுக்கு அருளிய கருணாமூர்த்தியான காளத்தியப்பர், ஞானத்தை அள்ளி வழங்கும் ஞானபீட நாயகி, ஞானப்பூங்கோதை, அருள் மழை பொழிய பக்தர்களை வரவேற்கும் தக்ஷிணாமூர்த்தி, இப்படி பரம்பொருள் பல கோலங்கள் கொண்டு அருள் புரியும் திருநகர் ஸ்ரீ காளஹஸ்தி. இப்புண்யதலத்தின் பெருமை பல புராணங்களிலேயும், காளத்தி தலபுராணத்திலும் விவரிக்கப்படுகிறது.

கலைச் செல்வங்கள் நிறைந்த இந்த அழகிய காளத்திநாதரின் ஆலயத்தைச் சுற்றி, முனிவர்களாலும், பக்தர்களாலும் ப்ரதிஷ்டை

செய்யப்பட்ட பல சிவாலயங்கள் உள்ளன. இவற்றில் முக்கியமாக, ப்ரம்மாவினால் முதலில் கைலை மலையில் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு, பிறகு தென் கைலைக்கு கொண்ட வரப்பட்ட காளத்தியப்பரின் கோயிலை ஒட்டியுள்ள பஞ்சமுகேஸ்வரரின் ஆலயமும், ஸ்ரீ நடராஜ ரங்கஸ்தலமும் ப்ரஸித்தி பெற்றவை. சிற்பங்களுக்கு பெயர் போன மஹாபலிபுரம், எல்லோரா போன்ற குகைச் சிற்பங்களை ஒத்த அளவில் அற்புதமான பல சிற்பங்கள் இந்த மலைச்சரிவில் உள்ளன.

தொண்டைமான்கள், பல்லவர்கள், சோழர்கள் (விஜய நகர அரசர்கள்), க்ருஷ்ணதேவராயர் முதலிய அரச பரம்பரைகளாலும், ஸமீபத்தில் நாட்டுக்கோட்டை நகரத்தாராலும், பல திருப்பணிகள் செய்யப்பட்டு, இந்த எல்லா நாகரீகங்களும் இணைந்து பொலியும் பெருமையுடையது ஸ்ரீகாளஹஸ்தி.

இப்படி பல இடங்களில் கூறப்பட்ட தலப் பெருமைகளை ஒருங்கே திரட்டி இத்தலப் பரமனையே மருமகனாக பாவித்த ''பவனி'' குலத்தோன்றல் ஸ்ரீ ஸீதாராமையா, சென்ற ஸ்ரீ முக மஹாசிவராத்ரி அன்று ''ஸ்ரீ காளஹஸ்தி மஹிமை'' என்று ஆங்கிலத்தில் ஒரு நூல் வெளியிட்டார். பக்தர்களுக்கிடையே வரவேற்பைப் பெற்ற அந்த நூல் தமிழ் மக்களின் விருப்புக்கிணங்க, ஸ்ரீ ஸீதாராமையாவின் மருமகளான ஸ்ரீமதி பவனி வள்ளி ஸத்யம், அவர்களால் தமிழில் ''ஸ்ரீ காளஹஸ்தி வரலாறு'' என ஆங்கிலப் பதிப்பின் கருத்தையொட்டி வெளியிடப்படுகிறது. ஸ்ரீ காளஹஸ்திநாதனிடம் 'பவனி' குடும்பத்ினர் கொண்ட ஈடுபாடும், இத்தலத்தைப் பற்றி அவர்களின் சிறந்த அறிவும், இந்த புத்தகத்தில் தெள்ளத் தெளிவாக விளங்குகின்றது.

ஸ்ரீ காளஹஸ்திநாதரின் பக்தர்களுக்கு, விளக்கமாக இருக்கும், இந்நூலை பக்தர்கள் வரவேற்றுப் பயனடைவார்கள் என உறுதியாக நம்புகிறோம்.

Srikalahasti
31-01-96

**N. Ramdas**
Vridhasram
(Hon. Manager)

# A. PADMANABAN, I.A.S. (Retd.)

**Former** : Chief Secretary & Adviser to Governor, Madras.
Member, Union Public Service Commission, New Delhi.

**President** : The People's Educational, Social & Cultural Society, Madras.
Authors Guild of India, New Delhi.

**Vice-President**: World Academy of Arts & Culture, U.S.A.
World Poetry Society Intercontinental, U.S.A.
World Congress of Poets.

Indian Editor : Poet International.


Date : 14-03-1996

சைவ சமயம் தமிழ்நாட்டின் பழமையான சமயங்களுள் ஒன்று. சிவனையே தென்னாடுடைய 'சிவன்' என்று போற்றி புகழ்வது மரபு. இச்சீரிய சமயத்தை வளர்த்த அரசர்களும், சிவனடியார்களும், பாவலர்களும் பலர். பல்லவ, சோழ, பாண்டிய அரசர்களும், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்ற சிவனடியார்களும் பாமாலைகளால் சிவனைப் போற்றி, பாடி இச்சமயத்தை மக்களிடையே பரப்பினார்கள். மற்ற நாயன்மார்களும், சாக்கிய நாயனார், திருநாளைப் போவார் (நந்தனார்) உள்பட மற்ற பெரியோர்களும், இத்தொண்டினை செய்துள்ளனர். பல திருத்தலங்களுக்குச் சென்று, புனித பணி ஆற்றியுள்ளனர். இந்த திருத்தலங்களிலே சீரும் சிறப்பும் பெற்றது ஸ்ரீகாளஹஸ்தி தலமாகும். தொன்மையும், நீண்ட சரித்திரத்தையும், புராணக் கதைகளையும், இயற்கை அழகையும் கொண்ட தலமாகும். இன்றும் பக்தர்கள், பாமரமக்கள் இத்தலத்திற்கு இறையருள் பெற சென்று வருகிறார்கள். பல்வேறு நிகழ்ச்சிகளை இத்தலம் தோற்றுவித்தது என்று கூறுவர். முக்கியமான நிகழ்ச்சி பக்த கண்ணப்பரைப் பற்றியதாகும். அவருடைய புனித இறையுணர்வும், அன்பும், மற்ற பக்தர்களும், முனிவர்களும் வியக்கும் வண்ணமிருந்தனயென்பதை யாவரும் அறிந்ததே. வேடுவனாயினும், இறைவன் தன் அருளையும், கருணையையும் தந்தார் என்ற உயர் தத்துவத்தை இந்த நிகழ்ச்சி எடுத்துக் காட்டுகிறது.

சமயம் மனிதனுக்காக ஏற்பட்டது. மனிதன் சமயத்திற்காக உதித்தவனல்ல. சமயம் வேறு, ஆன்மீகம் வேறு. அன்பு, அறம் இவைகளைக் கொண்டும், ஆண்டவன் அல்லது இறையுணர்வு என்ற அடிப்படை நம்பிக்கையாலும் மனிதன் நல்வாழ்க்கை வாழவேண்டும். இது ஆன்மீகத்திற்கும் சிறந்த வழி. கோயில்களும், திருத்தலங்களும், மனித குலம் இத்தகைய வாழ்க்கை வாழ, ''ஒன்றே குலம், ஒருவனே

தேவன்'' என்ற திருமூலரின் நெறியை பின்பற்றவும், உயர்வும், தாழ்வும் குலத்தால் இல்லை, குணத்தால்தான் உண்டு என்ற தத்துவத்தை எடுத்துரைக்கவும் பயன்படவேண்டும்.

திருமதி பவனி வள்ளி சத்யம் அவர்கள் ''ஸ்ரீகாளஹஸ்தி வரலாறு'' என்ற நூலின் மூலம் இந்த திருத்தலத்தின் தொன்மையையும், பெருமையையும், சிறந்த முறையில் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். பல்வேறு நிகழ்ச்சிகளை, புராண கதைகளை, நல்ல தமிழிலே யாவரும் புரிந்தகொள்ளும்படி எழுதியுள்ளார். இவர் சமயத்திலே, ஆன்மீகத் துறையிலே மிகவும் ஈடுபாடு உடையவர். ஸ்ரீகாளஹஸ்தீஸ்வரரிடம் தனிபக்தி கொண்டவர். இவர் கடின உழைப்பால், இறையுணர்வால், இந்த நூலை எழுதியுள்ளார். இவரை பாராட்டுகிறேன். இவர் படைப்பை போற்றுகிறேன். மேன்மேலும் இவர் பணி தொடர்ந்து பக்தர்களுக்கும், மக்களுக்கும், நன்மை தரும்படி அமைய வேண்டுமென்று வாழ்த்து கின்றேன். இவருடைய இந்த நல்ல நூலை யாவரும் படித்து நன்மை அடைவார்களென்று நம்புகிறேன். இறைவன் அருள்புரிவாராக!

"ANANDA ILLAM", 14, IX CROSS STREET,
SASTRI NAGAR,
MADRAS - 600 020. ✆ : 4910865

து. பத்மநாபன்
14-3-1996

# நன்றியுரை

நான் ஸ்ரீஞானப்ரசூனாம்பா ஸமேத ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரரையும், ஸ்ரீ சுபகாம்பா ஸமேத ஸ்ரீ விஜயேஸ்வரரையும் முதற்கண் நமஸ்கரிக்கின்றேன். மற்றும் ஸ்ரீ பாலாஜி வெங்கடேசுவரரையும் நமஸ்கரித்து, என்னுடைய முயற்சிகளுக்கு அவரது அருளையும், ஆசியையும் வேண்டுகின்றேன்.

நமது மதங்களையும், தத்துவங்களையும் பரப்பிக் கொண்டிருக்கிற ஆச்சார்ய மஹான்களுக்கும், எனது வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். திருவாளர்கள் R.L. நாராயணன், பவனி சீதாராமையா, பவனி வேணுகோபால் ஆகியவர்கள், இந்த அரிய நூலை எழுத என்னை ஊக்குவித்துள்ளனர். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி. மற்றும் இந்த நூலை நல்ல வடிவில் அமைக்க மிகவும் உதவி புரிந்த திருவாளர்கள் A. ராமானுஜம், B. நாகசுந்தரம், R. ராமகிருஷ்ணன் முதலியவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி.

தமிழகத்திலிருந்து, ஸ்ரீ காளஹஸ்தீசுவரரை தரிசிக்க வரும் எண்ணற்ற பக்தர்கள், பயனடைவதற்காக இப்புத்தகத்தை வெளியிடும் படி, என்னை ஊக்கப்படுத்திய ஸ்ரீ காளஹஸ்தி கோவில் ட்ரஸ்ட் போர்டின் 'சேர்மனாக' விளங்கும் திரு. சாந்தாராம் J. பவார் அவர்களுக்கு எனது நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன்.

Dr. A. பத்மநாபன் I.A.S. (தமிழ்நாடு அரசின் முன்னாள் பிரதம காரியதரிசி) அவர்கள் எழுத்துலகில் புகழடைந்து மேலும் தற்போது அகில இந்திய எழுத்தாளர் சங்கத்தின் தலைவராக உள்ளார். தன்னுடைய எழுத்தாற்றலினால் இந்தியாவிலும், மற்ற உலக நாடுகளிலிருந்தும் பல பரிசுகளையும், பட்டங்களையும் பெற்றவர். இவர் மிகுந்த ஊக்கத்துடன் இந்நூலை பரிசீலனை செய்திருக்கிறார்.

குணத்திலும், ஞானத்திலும், வயதிலும் முதிர்ந்த வயோதிக சேவையில் ஈடுபட்டிருக்கும் ப்ரம்மஸ்ரீ N.R. தாஸ் அவர்கள் மிகக் கருணையுடன் முன்னுரை எழுதியிருக்கிறார். ஓவியர் திரு. ஜெகந்நாத ராவ் (Sydney) அவர்கள் முகச்சித்திரம் வரைந்து கொடுத்திருக்கிறார். அவர்கள் அனைவருக்கும் எனது நன்றி.

இந்நூலை, நல்லவடிவில் அச்சடிக்க உதவிய ஸ்ரீ மாருதி அச்சகத்தாருக்கு எனது நன்றி உரித்தாகுக! இந்நூலை ஸ்ரீ ஞானாம்பிகா ஸமேத ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரர்க்கு அர்ப்பணித்து அவருடைய க்ருபா கடாக்ஷத்தை எதிர்நோக்குகின்றேன். இந்நூலை, மேலும் நன்றாக அமைய வாசகர்களின் அறிய ஆலோசனைகளையும், கருத்துக்களையும் வரவேற்கின்றேன்.

**பவனி வள்ளி சத்யம்**

# பொருளடக்கம்

## அத்யாயம் - 1

# ஸ்ரீ காளஹஸ்தி முக்யத்வம்

முன்னொரு காலத்தில் நைமிசாரண்யத்தில் முனிவர்கள் பலர் கூடி 'ஸத்ரயாகத்தில்' ஈடுபட்டு இருந்தனர். அந்த சமயம் வேதவ்யாஸரின் சீடரான ஸூதர் அங்கு வர, மற்ற முனிவர்களெல்லாம் அவருக்குச் சிறந்த வரவேற்பு அளித்தனர். பலவகையான தர்மங்களையும், எளிதில் அனைவராலும் கடைபிடிக்கக்கூடிய 'தர்மம்' எது என அறிவிக்கும்படி ஸூதரை அவர்கள் வினவினர். ஒருமுறை பரத்வாஜ முனிவருக்கு இந்த ஸந்தேஹம் ஏற்பட்டபோது, ரோமச முனிவர் பரத்வாஜர் த்ருப்தி அடையும் வகையில் விளக்கினார்.

தர்மத்தை கடைபிடிக்க ''ஏழு பாதைகள்'' உள்ளன. (1) ஸத்யம்(உண்மை) (2) சமம்(பொறுமை) (3) தபஸ்(தவம்) (4) தானம்(ஈகை) (5) யக்ஞம்(த்யாகம்) (6)க்ருஹஸ்தம்(இல்லறம்) (7) ஸந்யாஸம்(துறவு) ஆகியவை ஆகும். மேலும் ரோமசர் ஒவ்வொரு தர்மத்திலும் உள்ள சிறப்பினையும் அதைக் கடைபிடிக்கும் போது ஏற்படும் துன்பங்களைப் பற்றியும் விளக்கினார். இவையனைத்தையும் விட சிவ க்ஷேத்ரத்தினை அடைந்து, சிவபெருமானை வழிபட்டு, அவர்தம் கருணைக்குப் பாத்திரராவது தான் மிக எளிய வழி எனச் செப்பினார். இப்புனிதத் தலங்களில் தாம், நற்சிந்தையுள்ளோரின் நட்பு ஏற்பட்டு, மெல்ல மெல்ல ஸத்ஸங்கத்திலிருந்து, நிஸ்ஸங்கம் வரை, அதிலிருந்து நிர்மோஹம், பின் நிச்சலதத்வம், இறுதியில் ஜீவன் முக்தி பெறும். உமாமஹேஸ்வரரின் கருணைக்குப் பாத்ரமானால் ஒருவன் அனைத்தும் அடையப் பெறுவான். அங்கு ஆனந்தம் நிலைத்து நிற்கும். அதனால் க்ஷேத்ரவாஸம் சாலச்சிறந்ததாகும். எளிதில் அனைவராலும் அடையக் கூடியதாகும். சிவபெருமானது வாஸஸ்தலமாக வடக்கில் ''கேதார்நாத்தும்'', கிழக்கில் ''புவனேஸ்வரமும்'', மேற்கில் ''ஸோமநாத்தும்'', தெற்கில் ''ராமேஸ்வரமும்'' உள்ளன. அவர் பன்னிரெண்டு ஜோதிர்லிங்க க்ஷேத்ரங்களைப் பற்றியும், பஞ்சபூத க்ஷேத்ரங்களைப் பற்றியும் கூறலானார். கடைசியில், அவர் திருக்காளத்தியிலுள்ள, ஸ்வயம்புவான ப்ரம்மா, விஷ்ணு, இந்திரன், மற்ற தேவர்களால் வணங்கப்பட்ட வாயுலிங்கத்தைப் பற்றியும் கூறினார்.

ப்ரம்மனது தவமுயற்சியால் கைலாயத்திலிருந்து புனிதமான சிகரம் தக்ஷிணகைலாயத்திற்கு கொண்டுவரப்பட்டது. அகத்திய பெருமானின் பெரும் முயற்சியால் புனித கங்கை, ஸ்வர்ணமுகியாக இவ்விடத்திற்கு கொண்டு வரப்பட்டாள். இம்மலையானது, கணக்கற்ற பல குகைகளையும், அழகிய மலைச் சரிவுகளையும், குளங்களையும் கொண்டுள்ளது. 'ப்ரம்மகிரியை' பிறப்பிடமாகக் கொண்ட ஸ்வர்ணமுகி, திருவேங்கடமலையின் வழியாகப் பாய்ந்து, வழியில் பல புனிதத் தலங்களையும், ஆச்ரமங்களையும் ஏற்படுத்தி பின்னர் கடலில் கலக்கிறாள். பல வகையான சிறப்புகளைக் கொண்ட இந்த க்ஷேத்ரமானது ''சிவ ஆனந்தைக நிலையம்'', ''தக்ஷிண கைலாயம்'', ''அகண்டபில்வ கானனம்'', ''ஸத்யவ்ரத பாஸ்கர க்ஷேத்ரம்'' என்றெல்லாம் போற்றப்படுகிறது.

தேவர்கள் மட்டுமல்லாது, நாரதர், வஸிஷ்டர், வ்யாஸர், சுகர், மார்கண்டேயர், அகத்தியர், ரோமசர், பரத்வாஜர் போன்ற பல முனிவர்கள் இங்கு சிறு குடில்களை அமைத்துக்கொண்டு தவநெறியில் ஈடுபட்டு, சிவபெருமானின் கருணைக்குப் பாத்ரமாயினர். பல்லவ, சோழ, பாண்டிய, விஜயநகர அரசர்கள், திருகாளத்தீஸ்வரரை வழிபட்டு, ப்ரஹாரங்கள், மண்டபங்கள், கோபுரங்கள் போன்ற பலவித கோயில் பணியில் ஈடுபட்டு இருந்தனர். தூர்ஜடி, நக்கீரர், பீமர் போன்ற கவிகளும், நாயன்மார்களாகிய அப்பர், ஸுந்தரர், ஸம்பந்தர், மாணிக்கவாசகர் போன்ற சிவனடியார்களும், இத்தலத்திற்கு வருகை தந்து, தம்மை ஆட்கொண்ட தம் தலைவனுக்கு பாமாலை என்ற புகழாரம் சூட்டி மகிழ்ந்தனர். ஆதிசங்கரரும் இப்புண்ய தலத்திற்கு விஜயம் செய்து, பல ஸ்தோத்ரங்கள் இயற்றினார்.

வேதவிற்பன்னர்களும், ஸாதாரண மக்களும், ஸ்ரீவித்யா உபாஸகர்களும், பாமர மக்களும் கூட தத்தம் வழியிலே இறைவனைக் கண்டனர். ஸர்வேச்வரன், யார் தன்னைத் தொழுதாலும், அவர் தேவரா அல்லது அரக்கரா, ஸாதுக்களா அல்லது பாவிகளா, மானிடர்களா அல்லது ம்ருகங்களா என வேறுபாடு பாராமல், அவர்தம் பக்தி ஒன்றினையே ஏற்றுக்கொண்டு அனைவருக்கும் கருணை மழை பொழிகிறார். வேடுவன்

கண்ணப்பனது வழிபாடு முறையற்றதாக இருந்தாலும், வேத சாஸ்த்ரங்களுக்கு அப்பார்பட்டதாய் இருப்பினும், பக்தி என்ற நிலையில் அவன் தனித்து, உன்னதமான இடத்தை பெற்றிருக்கிறான். பக்தி ஒன்றே எப்போதும் எம்பெருமானால் ஏற்றுக்கொள்ளப்படும்.

பஞ்சபூத க்ஷேத்ரங்களுள், இத்தலம் வாயுவினுடையதாகும். வாயுவை கண்ணால் காணமுடியாதெனினும், உணர முடியும். நவக்ரஹ க்ஷேத்ரங்களுள் ''ஸர்பதோஷத்தைப்'' போக்கும் ''ராஹு கேது'' க்ஷேத்ரமாகும். சூர்ய, சந்திர க்ரஹண காலங்களில் அனைத்து கோவில்களும் அடைத்திருக்கும் போதும், திருக்காளத்தீஸ்வரருக்கு மட்டும் தீவிர பூஜை முதலிய வழிபாடுகள் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கும். சங்கரனை குறிக்கும் கைலாயகிரிக்கும், உமாபார்வதியைக் குறிக்கும் துர்கை குன்றிர்க்கும் இடையே குன்றின் மீது குடிகொண்டுள்ள குமாரஸ்வாமி, ஸோமஸ்கந்தரையும் குறிக்கிறது.

பெயரற்ற, உருவமற்ற பரப்ரம்மமானது, தன்னைத் தொழுத ஜந்துக்கள் 'ஸ்ரீ' என்ற பெயர் கொண்ட சிலந்திக்காகவும், 'காளன்' என்ற பெயர் கொண்ட நாகத்திற்காகவும், 'ஹஸ்தி' என்னும் யானைக்காகவும், அவை விரும்பினார்போல் உருவம் கொண்டும், திருக்காளத்தீஸ்வரன் (ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரன்) என்னும் நாமம் கொண்டும் விளங்குகிறார். காசி க்ஷேத்ரத்தில் ஏற்படும் மரணம் எவ்வளவு சிறப்பானதோ, அத்தனைச் சிறப்பானது இந்த க்ஷேத்ரத்திற்கு மேற்கொள்ளும் புண்ய யாத்ரையாகும். ''ஸத்யோ முக்தி க்ஷேத்ரம்'' என்று மேன்மையும் பெற்றுள்ளது இத்தலம். ஞானப்ரஸூனாம்பிகை ஸமேதராக இங்கு குடிகொண்டுள்ள சங்கரன் தம்மை வழிபடுவோருக்கு சிறந்த ஞானமும்(அறிவாற்றலும்), வேண்டும் வரங்களும் அளிப்பான் என்பது திண்ணம்.

இந்த முன்னுரையோடு, மாமுனி ரோமசர், இத்தலத்தினது பெருமையையும், எம்பெருமானை வழிபட்டு, மேன்மையடைந்த பக்தர்களின் சரித்ரத்தை பற்றியும் கூறத்தொடங்கலானார்.

## அத்யாயம் - 2

# ப்ரம்மா - படைப்பவர்

முதன்முதலில் ஒன்றும் தோன்றவில்லை - ஏன் ? பஞ்சபூதங்களாகிய மண், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் ஒன்றும் இல்லை. கடல்களும், நதிகளும், மலைகளும் ஏதும் உருவாக்கப் படவில்லை. விஷ்ணு, ப்ரம்மன், ஸூர்யன், சந்திரன், கோள்கள், நக்ஷத்ரங்கள் முதலானோர் கூட தோன்றியிருக்கவில்லை. காலை, மாலை என்ற பொழுதுகளும் இல்லை. யாவற்றிர்க்கும் முதற்காரணமாக விளங்கும், பரமசிவன் தன் மாயையோடு காணப்பட்டார். என்றும் நிலைத்திருக்கின்றவரும், தூய்மையானவரும், சிறந்த அறிவாற்றல் பொருந்தினவரும், ஸர்வ வ்யாபியானவரும், ஸர்வ சக்திகளையுடையவருமான பரமசிவன் தோன்றியிருந்தார். அவர் மாயையின் துணைகொண்டு, அவர் விரும்பியவாறு ஸகல அண்ட சராசரத்தை உருவாக்கினார். முதன்முதலில் பஞ்சபூதங்களை உருவாக்கினார். இதன் காரணமாக 'படைத்தல்' உருவாக்கப்பட்டது. ப்ரம்மனும், விஷ்ணுவும், பரம்பொருளின் வல, இட புறங்களைத் தம் உறைவிடமாகக் கொண்டனர். காலாக்னி ருத்ரன், பெருமானது நெற்றியிலேயே இடம் பிடித்தார். இம்மூவரும், ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களை மேற்கொண்டனர். ப்ரம்மன், பூலோகம், புவர்லோகம், ஸ்வர்கலோகம், மஹர்லோகம், ஜனலோகம், தபோலோகம், ஸத்யலோகம் போன்றவைகளையும், மற்றும், அதலம், விதலம், ஸுதலம், ரஸாதலம், தலாதலம், மஹாதலம், பாதாளம் ஆகிய பதினான்கு உலகங்களை படைத்த பின்னர், மேற்கொண்டு படைக்க அவரால் இயலவில்லை.

ஒன்றும் புரியாத நிலையில் அவர் விழித்துக்கொண்டும் இறைவனை வேண்டிக்கொண்டும் இருந்த நிலையில் அசரீரி ஒலிக்கக் கேட்டார். அதாவது ப்ரம்மதேவர், கைலாய மலையிலுள்ள, ''சிவானந்தைக நிலையம்'' என்னும் புனித சிகரத்தை தன் தோளின் மீது எடுத்து பூலோகம் வழியாகச் செல்லும் போது, எங்கு சிகரத்தின் பாரத்தை உணர்கிறாரோ, அவ்விடத்திலே அச்சிகரத்தை ப்ரதிஷ்டை செய்து, அவரும் அவ்விடத்திலேயே தவம் செய்தால்

ஸம்பிக்ஷம் ஏற்படும் என்று 'ஆகாசவாணியின்' கூற்றைக் கேட்டு மனம் மகிழ்ந்து, செயல்படத் தொடங்கினார். புனிதமான சிகரத்தைத் தன் தோளின் மீது சுமந்து, பூமியில், மேரு, ஹிமாலயம் போன்ற மலைகளைக் கடந்து, தென்திசை வழியாகச் செல்லும் போது, பரம்பொருள் வாயுலிங்கமாக சிகரத்தினுள் நுழைந்தார். இதன் காரணமாக ஏற்பட்ட அதிக பாரத்தை சுமக்க முடியாது சிகரத்தை கீழே வைத்து விட்டார். ''இவ்விடமே தற்போது அழைக்கப்படும் திருக்காளத்தி திருத்தலமாகும்''. படைக்கும் தொழிலினை மேற்கொண்டவர், இவ்விடத்திலேயே தங்கி, தவம் செய்ய முடிவு செய்தார்.

வாயுலிங்கத்திற்கு தெற்கே, புனிதமான அந்த மலைச் சரிவில் ஓர் அழகிய லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்தார். அதற்கு தத்புருஷன், அஹோரான், ஸத்யோஜாதன், வாமதேவன், ஈசானன் என்ற பஞ்ச முகங்களும் இருந்தன. 'கைவல்யம்' என்னும் தீர்த்தத்தை தனது தினசரி தேவைக்காக உருவாக்கினார். அவர் நிதமும் அதிகாலையில் எழுந்து நீராடி, தனது உடலின் பதினைந்து பாகங்களில் திருநீரு பூசிக் கொண்டு, ருத்ராக்ஷத்தை அணிந்து கொண்டு, பச்சைக் கற்பூரம் கலந்த நீரைக் கொண்டு வாயுலிங்கத்திற்கு அபிஷேகம் செய்யலானார். ஏனைய தேவர்கள் மற்றும் பல முனிவர்களின் துணைகொண்டு, வழிபாட்டிற்கான பல பொருட்களை சேகரித்து தன்னால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கத்தை வழிபடலானார்.

அவர் பிறைச்சந்திரனுடன் கூடிய வாயுலிங்கத்திற்கு சிறந்த வாசனைத் தைலங்கள், பஞ்சகவ்யம், பஞ்சாம்ருதம், பஞ்ச சூர்ணங்கள், மதுரத்ரயம், இளநீர், வெல்லநீர், பன்னீர் முதலானவைகள் கொண்டு அபிஷேகம் செய்தார். சந்தனம், சங்குதீர்த்தம், பொன்னாலான ஆயிரம் கலசங்களிலுள்ள தீர்த்தத்தைக் கொண்டும் அபிஷேகம் செய்தும், மந்திரங்களைக் கொண்டும் வழிபட்டார். பின்னர் விபூதி, பட்டினால் நெய்யப்பட்ட ஆடைகள், பலவித வைரங்கள் பதிக்கப்பட்ட ஆபரணங்களைக் கொண்டு லிங்கத்திற்கு அலங்காரம் செய்தார். பலவகையான நறுமணம் வீசும் மலர்களைக் கொண்டும், பில்வ இலைகளைக் கொண்டும் சிவஸஹஸ்ரநாம அர்ச்சனை செய்யலானார். பலவகையான பலஹாரங்களைக் கொண்டும், தேங்காய் மற்றும், பழங்களைக் கொண்டும் நிவேதனம் செய்தார். பலவகையான ஹாரத்திகளை

எடுத்து, சத்ர - சாமரங்களை வீசியும், கற்பூர தீபம் காட்டியும் வழிபட்டார். வேத கோஷங்களும், உபநிஷதங்களும், ஸூக்தங்களும், இதிஹாஸங்களும், புராணங்களும் அச்சமயம் ஓதப்பட்டன. ஸாமகான ப்ரியனை மகிழ்விப்பதற்காக பல இனிய பாடல்கள் பாடப்பட்டன. வீணை முதலான இசைக்கருவிகள் இசைக்கப்பட்டன. நடராஜனை மகிழ்விப்பதற்காக ந்ருத்யம், நாட்யம், லாஸ்யம் முதலானவை நடத்தப்பட்டன. மந்திரபுஷ்பம் கூறப்பட்டது. சிவசங்கரனை போற்றி புகழ்ந்தவாறு அனைவரும் ப்ரதக்ஷிணம் செய்து ஸாஷ்டாங்கமாக வணங்கி ஸேவித்தனர். அதன்பின் ப்ரம்மதேவர், பஞ்சாக்ஷரி மந்திரத்தை நள்ளிரவு வரையில் ஜபிக்கத் தொடங்கினார். இவ்வாறாக வருடங்கள் பல கழிந்தன.

ஒரு சமயம் மாசி மாதத்தில், பௌர்ணமி நள்ளிரவில், ஞானாம்பிகை ஸமேதராக திருக்காளத்தீஸ்வரர், வாயுலிங்கத்தினின்று தோன்றினார். பலவகையான வைரங்கள் பதிக்கப்பட்ட கிரீடத்தை அணிந்தவராயும், பிறைச்சந்திரன், அதன் மீது தவழ்ந்தாடவும் காணப்பட்டார். எண்ணற்ற ஆபரணங்களை அணிந்தவராயும், புலித்தோல் உடுத்திக்கொண்டவராயும் விளங்கினார். ஒரு கையில் சூலமும், மற்றொரு கையினில் உடுக்கையும் காணப்பட்டது. மற்ற இரு கைகளும் வரம், மற்றும் அபயம் தரும் முத்ரைகளுடனும் கொண்டவராய் காட்சியளித்தார். நந்திதேவருடன், பல சிவகணங்கள் எம்பெருமானை சுற்றி ஆனந்தமாக நடனமாடிக் கொண்டிருந்தன.

ஆனந்தத்தின் உச்ச நிலையை அடைந்து ப்ரம்மன் சிவபிரானை ஸாஷ்டாங்கமாக வணங்கி, ஸேவித்து தன்னை சூழ்ந்து கொண்டிருக்கும், சிவமாயையை நீக்குமாறு வேண்டிக் கொண்டார். படைத்தலுக்கு வேண்டிய ஆற்றலை திரும்பவும் பெற்றார். அப்போது முதல் பன்னிரெண்டு நாட்கள் ப்ரம்மோத்ஸவத்தை அவர் திருக்காளத்தீஸ்வாருக்காக ஏற்படுத்தினார். பின்னர் ஸத்ய லோகத்திற்கு திரும்பிச் சென்று தன் ஆக்கும் தொழிலில் ஈடுபடலானார்.

ஆக்குதல், காத்தல், அழித்தல் அனைத்து படைப்பினிலும், பரமேஸ்வரன் சிறந்த ஒளியாக ஜ்வலிக்கிறார். சிவமாயையினால் அனைத்து படைப்புகளும் ஸம்ஸார சக்ரத்தில் உழல்கின்றன. அவரவர் கர்ம வினைகளின்படி, ஸ்வர்கம், நரகங்களுக்கு செல்கின்றனர். சங்கரனை, சரணாகதி அடைந்தோர்

மட்டும் பிறப்பு, இறப்பு அற்ற ஸாயுஜ்ய முக்தி அடைய முடியும் என்பது திண்ணம்.

## அத்யாயம் - 3

# அகத்திய முனிவர்

க்ருதயுகத்தில், சிவபெருமானுடைய உறை விடைமாகிய கைலாயத்தில், ஒரு மாநாடு நடந்தது. தேவர்கள், முனிவர்கள் யாவரும் அவ்விடத்திற்கு விஜயம் செய்திருந்தனர். ஏன்? மஹாஸமுத்ரங்களும், நதிகளும், மலைகளும் கூட தேவ உருக்கொண்டு, மாநாட்டில் கலந்து கொண்டிருந்தன. ப்ரம்மதேவர், சில கருத்துக்களைப் பற்றி ஆலோசிக்க விழைந்தார். (1) தர்மங்களில் எது தலையானது? (2) தேவர்களில் யார் தலை சிறந்தவர்? (3) எவரைப் பூஜித்தால், அனைவரையும் பூஜித்ததற்கு ஸமம் எனக் கருதப்படுவார்? போன்றவையாகும்.

ஒவ்வொருவரும், அவரவர் கருத்துக்களை ஸபையின் முன் வைத்து அதற்குரிய காரணத்தையும் விளக்கினர். ப்ருகு முனிவரோ, தலையாய தர்மம் என்பது விஷ்ணுவையே குறிப்பிடும். அதனால் அவரே தலையாய கடவுளாக கருதப்பட வேண்டும், என வாதிட்டார். இக்கருத்தினை மறுத்த அகத்திய முனிவர், முக்கண்ணனே அனைவருக்கும் முதலானவன். தர்மத்தின் விளக்கமே பரமேஸ்வரன். இவரிடத்திலிருந்தே ப்ரம்மனும், திருமாலும் தம் சக்தியைப் பெற்றனர் என்ற கூற்றினை வலியுறுத்தினார். இறுதியில் அகத்தியர் யார் என்னை ஆட்கொண்டு, நான் அனைவராலும் வழிபடத் தகுந்தவன் என்பதை அறிவிக்கிறாரோ, அவரே கடவுள்களில் சிறந்தவராவார். அதுவரையில் நான் தவத்தினில் மூழ்கியிருப்பேன் என சூளுரைத்தார். ப்ருகு முனிவரும் இச்சபதத்திற்கு ஒத்துக்கொண்டார். தவம் செய்வதற்காக அகத்தியர் தக்ஷிண கைலாயத்திற்குச் சென்றார். திருமால் ப்ருகு முனிவரைத் தனியே அழைத்து, சிவனே அனைத்து அண்ட சராசரங்களுக்கும் தந்தையாக விளங்குகின்றார். மேலும், தான் கூட அவர்தம் பக்தனே எனக் கூறினார்.

அகத்தியரது தவத்தின் வலிமை ஈடு இணையற்றது.

இத்தவத்தினது தீவிரத்தால் ஏற்பட்ட வெப்பமானது மூன்று உலகங்களையும் தாக்கியது. தேவேந்திரனுக்கு, எங்கே முனிவர் தன்னை ஸ்வர்கத்திலிருந்து வெளியேற்றி, தனக்கு விருப்பமானவரை அரசனாக நியமிப்பாரோ ? என்ற அச்சம் ஏற்பட்டது. முனியின் தவத்தை எவ்வாறேனும் கலைக்க எண்ணம் கொண்ட இந்திரன், அப்ஸரஸ்களையும், வஸந்தன், மற்றும் மன்மதனையும் துணை கொண்டு தக்ஷிண கைலாயத்திற்கு அனுப்பினான். அங்கு நல்ல நறுமணம் கொண்ட மலர்கள் பூத்துக் குலுங்கின. பறவைகள் இனிமையான ஸங்கீதம் பாடின. இந்திரனது லீலைகளுக்கு, அகத்தியரின் சீடர்கள் விரைவில் அடிமையாயினர். இதன் காரணத்தை உணர்ந்த மாமுனிவர், க்ஷேத்ரபாலன் பைரவனை, தம் தவத்தினை காக்கும் படி வேண்டிக் கொண்டார். அவரும், பயங்கர ரூபத்துடன் கொடூரமான நாய்களுடன், அங்கு தோன்றினார். அப்பயங்கர தோற்றத்தையுடைய நாய்களின் ஊளைகளை பொறுக்க முடியாத வஸந்தன், மன்மதன் மற்றும் அப்ஸரஸ்கள் தேவலோகம் சென்றடைந்தனர். யாதொரு தடையின்றி, அகத்தியர் தம் தீவிர தவத்தை தொடர்ந்தார்.

அவர் கோடை காலத்தில் 'தீ' வளர்த்து அதன் நடுவே நின்று கொண்டும், நடுநடுங்கும் குளிர் காலத்தில், குளிர்ந்த நீரின் நடுவே நின்று கொண்டும் தவம் செய்தார். கொளுத்தும் ஸூர்யன், உறைய வைக்கும் குளிர், எதையும் அவர் பொருட்படுத்தவில்லை. அவர் படிப்படியாக உணவை தவிர்த்து, காற்றை மட்டும் ச்வாஸித்துக் கொண்டு வாழ்ந்தார். இவ்வாறு சில காலம் சென்ற பின்னர், பரமசிவன், ரிஷப வாகனத்தில் தனது உமையுடன், முனிவருக்கு காட்சியளித்தார். முனிவரால் தொடுக்கப்பட்ட பாமாலையை மன நிறைவுடன் ஏற்றுக் கொண்ட இறைவன் முனியை ஆசீர்வதித்தார். தேவர்களாலும் வணங்குதற்குரிய தகுதியைப் பெறுவாய் ! என அருள் செய்து மேலும் பல சக்திகளை அவருக்கு அருளினார். தனது சக்தியால் விந்திய மலையின் உயரத்தைக் குறைத்தும், அனைத்து ஸமுத்ர நீரை தன் உள்ளங்கையால் பிடித்துக் குடித்தும், போன்ற அரிய செயல்களை அவரால் ஆற்ற முடிந்தது. பின்னர் விநாயகரை வணங்கி, ஸ்வர்ணமுகி நதியை, தக்ஷிண கைலாயத்திற்கு கொண்டு வந்தார். ஸ்ரீ ராமனுக்கு ''ஆதித்யஹ்ருதய'' மந்திரத்தை போதித்து இலங்கை வேந்தன் ராவணனை கொல்ல உதவினார்.

(அகத்திய லிங்கமும், ஞானப்ரகாச தீர்த்தமும் திருக்காளத்திக்கு தெற்கில் ஒரு மைல் தொலைவில் காணப்படுகின்றன.)

## அத்யாயம் - 4
## பாதாள விநாயகர்

ஒரு முறை சக்தியின் அம்சமான பார்வதி தேவி, கைலாயத்திறகுச் செல்லுமுன் ஸ்ரீகாளஹஸ்தியில், தீவிர தவம் செய்ய எண்ணம் கொண்டாள். தவம் செய்யும் போது ஏற்படும் தடைகளை நீக்குவதற்காக தன் மகனான கணபதியின் உதவியை நாடி, தனது தவத்தினை பாதுகாப்பதற்காக கணபதிக்கு, (1) பாபஹாரக (2) விக்னஹாரி (3) பார்வதிபூஜித (4) புஷ்டித ஆகிய குணாதிசயங்களை அவருக்கு வழங்கினாள். அவர் நான்கு, ஐந்து, ஆறு, எட்டு அல்லது பத்து கைகளும், பலவிதமான ஆயுதங்களுடனும், முத்ரைகளுடனும் விளங்குகிறார்.

அந்த சமயத்தில், 'கஜாஸுரன்' என்னும் அரக்கன் பூமியில் உள்ள, மானிடர்களைக் கொடுமைபடுத்தியதோடல்லாமல், கருணையின் வடிவான உமையவளின் தவத்தையும் கலைக்க, விருப்பம் கொண்டான். நம் புஷ்டி கணபதி அந்த அஸுரனை பாதாள லோகத்திற்குத் தள்ளி, அவனை வெற்றி கொண்டார். இதற்கிடையில். திருக்காளத்தியில் தங்கியிருந்த, அகத்திய முனிவருக்கு, அவ்விடத்திலே ஒரு புனித நதிக்கு வழி வகுக்குமாறு, அசரீரி வாயிலாக கூறப்பட்டது. நதியானது ஒரு சரியான மலையிலிருந்து உருவாக வேண்டும் என்பதை மாமுனி, தன் சீடர்களுடன் கூடி கலந்தாலோசித்தார். புனித கங்கையானது இம்மண்ணிற்கு வர, சிறந்த இடம் உருவாக வேண்டும். அது பாய்ந்தோடி வரும் வழியானது, சிறந்த ஆச்ரமங்களை கடந்து வருவதாயும், சுற்றியுள்ள நிலங்களை, வளம் பெறச் செய்யக் கூடியதாயும் அமையவேண்டும். அப்புனித நதியின் நீரானது, சிறந்த ஸ்படிகத்தை போல் தூய்மையுடையதாகவும், தேவர்களாலும், முனிவர்களாலும், வணங்கக் கூடியதாயும், நமது பாபங்களைக் கறைக்கும் வல்லமை பெற்றதாயும் விளங்க வேண்டும். முனிவர் இதற்குரிய சிந்தனையில் ஆழ்ந்து இருக்கும் போது, பாதாளத்திலிருந்து, திரும்பிக்கொண்டிருந்த கணேசப் பெருமானை,

வாயுலிங்கத்தின், கிழக்கில் சில கஜங்களே தூரமுள்ள பாதாளத்தின் வாயிலில் தர்சித்தார்.

அவர், உடனே பலவகையான பூக்களாலும், இலைகளாலும், கந்த புராணத்தில் கூறியுள்ளவாறு கணேசரை வழிபடத் தொடங்கினார். அகத்தியர், மூஷிக வாகனனை பசு நெய்யால் செய்யப்பட்ட பலவகை இனிப்புக்களும், மோதகங்களும் படைத்து, ஸாஷ்டாங்கமாக வணங்கி, கணபதிக்கு இவ்வாறு பாமாலை சூட்டினார்.

''ஹே! முக்கண் முதல்வனான சிவனின் மகனே! விக்னராஜனே! யானையின் தலையினையுடையோனே! கஜாஸுரனை வெற்றிக் கொண்டோனே! ஏகதந்தனே! நம்பினோருக்கு பல வரங்களை அளிப்போனே! கந்தனுக்கு மூத்தோனே! அனைத்து உயிருள்ள பொருட்களுக்கும், ஜடப் பொருட்களுக்கும், மிகப் பெரிய வயிற்றில் இடம் கொண்டவனே! 'ஓம்' காரத்தை குறிக்கும் வளைந்த துதிக்கையை உடையவனே! எனப் புகழ்ந்துரைத்தார்''.

இந்தப் புகழுரைகளால் மனம் குளிர்ந்த 'பாதாள கணபதி' புன்முறுவலோடு அவரது அவாவை உறைக்கும்படி கூறினார். முனியும் தனக்கு சில வரங்களை அளிக்கும்படி வேண்டினார்.

நீ ''அகஸ்திய வந்தித'', ''பக்த வாஞ்சிதார்த்த ப்ரபூரக'', ''கஜானனாரி'', ''பாதாளகர்தவாசி'' என வழங்கப்பட வேண்டும். யார் உன்னை இந்த நான்கு நாமங்களைக் கொண்டு, வழிபடுகிறார்களோ அவரது விக்னங்கள் யாவும் விலகவேண்டும்.

'ஸர்வ விக்ன ப்ரசமக்' எனும் பெயருடைய ஒரு தீர்த்தம் கடவுளால் உருவாக்கப்பட வேண்டும். அதில் செய்யும், ஒவ்வொரு ஸ்நானமும் பலனுடையதாக இருக்க வேண்டும்.

விநாயகர், பூமியின் அடியிலுள்ள பாதாளத்தில் வீற்றிருந்து, தன்னை வணங்குவோருக்கு, நல்வரங்களை அளிக்க வேண்டும்.

ஆகாச கங்கை உருவாக ஒரு சிறந்த மலைச் சிகரத்தைக்

காட்டும் படியும், அந்த தீர்த்தமானது, திருக்காளத்தி வழியாக பாய்ந்தோடி பின்னர் ஸமுத்ர ராஜனை அடையவேண்டும் என வேண்டிக் கொண்டார்.

கஜானனனும், மனமகிழ்ந்து, முனியின் விருப்பத்தை பூர்த்தி செய்ய எண்ணம் கொண்டு, தனது தந்தத்தால் மண்ணைத் தோண்டியவுடன், பாதாள கங்கை பீறிட்டு எழுந்தது. கைலாயகிரிக்கு தெற்கில் எண்பது மைல்கள் தொலைவிலுள்ள ''ப்ரம்மாசலமே'' இந்நதியின் பிறப்பிடமாகும். விநாயகரின் கட்டளைப்படி, கங்கை பல புனிதத் தலங்களையும், வடக்கில் திருக்காளத்தியையும் கடந்து, பின்னர் கடலில் கலந்தது. கங்கையானவள், தெய்வ வாக்கின்படி முனிவரால் வெற்றிகரமாக திருக்காளத்திக்கு கொண்டுவரப்பட்டாள். தூய்மையான நீரினையுடைய இவள் ''ஸ்வர்ணமுகி'' என அழைக்கப்படலானாள். பாதாள விநாயகரை வழிபட்டதன் காரணமாக, அகத்திய முனிவரால் தக்ஷிண கைலாயத்திற்கு, பாதாள கங்கையானவள் கொண்டுவரப்பட்டாள்.

## அத்யாயம் - 5

## ஸ்வர்ணமுகி நதி

அகத்திய முனி, பாதாள விநாயகரின் அருளாசியோடு, ப்ரம்மாசலத்திற்குச் சென்று, தவம் செய்யத் தொடங்கினார். இம்மலையின் சூழ்நிலை, தவம் செய்யவும், அமைதி கொடுப்பதாயும் இருந்ததனால், பல முனிவர்கள் அங்கே வாழ்ந்து வந்தனர். முனிவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி அகத்தியர் சிவலிங்கம் ஒன்றை ப்ரதிஷ்டைச் செய்தார். ஒரு புனித நதியை, திருக்காளத்திக்கு கொண்டு செல்ல வேண்டும் என்று தாம் வந்த காரணத்தை எடுத்து உரைத்தார்.

கங்கா மாதாவிற்கு, முாமுனி விரும்பும் மலையுச்சியையே பிறப்பிடமாகக் கொண்டு, முனிவர் விரும்பும் வழியாகவே பாய்ந்தோட வேண்டும் என்று பரமசிவனால் அன்புக் கட்டளை இடப்பட்டது. கணபதியும் தம் தந்தத்தால் மண்ணினைத் தோண்ட , கங்கையும் பீரிட்டு வழிந்து, பளிங்கு போன்ற நதியாக உருவெடுத்தாள். அவள் உருவெடுத்த ஊற்று ''அகத்திய தீர்த்தம்'' என

வழங்கப்படுகிறது. முனிவர் வழிகாட்ட கங்கையும், மகிழ்ச்சியுடன் துள்ளிக் குதித்துக்கொண்டே மெல்ல மெல்ல மலையில் இருந்து இறங்கினாள். வழியில் பல சிற்றாறுகள் இவளுடன் கலந்தன. ஜ்வலிக்கும் ஏழு சிகரங்களைக் கொண்ட வேங்கடாசலம் எனும் அற்புதமலையின் அடிவாரத்தினை அடைந்தாள். இவ்விடத்தினில், இந்நதியில் நீராடி வேங்கடவனைத் தொழுவோருக்கு அவர்தம் தேவையெல்லாம் நிறைவேறும் எண்பது திண்ணம். இவ்வாறாக வழியில், பலவித தீர்த்தங்களை ஏற்படுத்தி, வடபுறமாகத் தவழத் தொடங்கினாள். திருக்காளத்தியை அடைந்த போது நதியினது கம்பீரம் கூடுதலாகி பாப விசேஷ க்ஷேத்ரத்தில் கோயில் கொண்டுள்ள அர்தநாரீஸ்வர லிங்கத்தின் மேற்கு புறமாகச் சென்று, பின்னர் கிழக்கு முகமாகச் சென்று பல ஆச்ரமங்கள், புண்யத்தலங்கள் வழியாக தவழ்ந்தோடி, பின்னர் தன்னை வாஞ்சையோடு, அலைகளாகிய காங்களைக் கொண்டு வரவேற்கும், ஸமுத்ர ராஜனோடு கலந்தாள்.

ப்ரம்மதேவர், வாயுதேவனிடம், தேவர்களையும், மானிடர்களையும் மகிழ்விக்கும் இந்நதிக்கு இருபத்தைந்து நாமங்களை சூட்டுவாயாக! இந்நாமங்களைப் பாராயணம் செய்வதினால் வருங்காலம் செல்வ வளமும், செழிப்பும் பெறும் எனக் கூறி ஆசிர்வதித்தார். வாயுதேவனும், தக்க சமயத்தில் வந்து ம்ருதுவான குரலில் நதியின் நாமங்களை இசைக்கத் தொடங்கினார்.

(1) அகஸ்த்ய கிரிஜா (2) ப்ரம்ம புத்ரீ (3) அகஸ்த்ய நந்தினீ (4) வியத் கங்கா (5) ஸர்வ தீர்த்த ஸேவிதா (6) ஸரித்வரா (7) அவிச்சின்னராயா (8) பஹிரந்த மலாபஹா (9) பாவனீ (10) த்ரிஜகதாத்ரீ (11) பவித்ரீக்ருத திக்முகா (12) சிவாநந்தகரீ (13) அகண்ட ப்ரம்ம விக்ஞானதாத்ரீ (14) வேகவதி (15) யசஸ்வினீ (16) மஹாபாகா (17) வக்ரகா (18) கண நாதினீ (19) ஸுதா (20) திவ்யோதகா (21) பாசமூல நித்ருந்தரீ (22) உதன்முக வாகினீ (23) மனோக்யாஸிகதா (24) பஞ்சபஞ்சாச சைலபேதினீ (25) ஸ்வர்ணமுகி

மேற் கூறிய நாமங்கள் அனைத்தும், சங்கரன் முதலான தேவர்களைத் த்ருப்திபடுத்தியதால் அவர்கள் யாவரும் நதியினில் நீராட விரைந்தனர். தக்ஷிண கைலாயத்தில் ஓடி விளையாடும் ஸ்வர்ணமுகியானவள், தேவர்கள் நடுவே ''புருஷோத்தமன்'' போலவும், நக்ஷத்ரங்களுக்கிடையே ஜ்வலிக்கும் ''சந்திரன்''

போலவும், மந்திரங்களிலே மிக உன்னதமான ''காயத்ரி'' போலவும் சிறந்து விளங்கினாள். க்ரஹணகாலங்களிலும், மற்ற விசேஷ நாட்களிலும் இந்நதியில் நீராடுதல் சாலச் சிறந்தது.

## அத்யாயம் - 6

# குரு குஹன்

ஒரு சமயம் சங்கரன் தன் மைந்தன் ஸ்கந்தனை கொஞ்சிக்கொண்டிருக்கும் போது பார்வதி தனக்கு 'ஓம்' என்னும் ப்ரணவத்தின் அர்த்தத்தை விளக்கும்படி வேண்டினாள். அதைக் கேட்டுக்கொண்டிருந்த ஸ்கந்தன் சிவபெருமான் கூறிய விளக்கத்தை முழுமையாக க்ரஹித்துக் கொண்டான். சில வருடங்களுக்குப் பிறகு ஸ்கந்தன் தன் தந்தையிடம் வேதம், வேதாங்கம் மற்றும் பல விஷயங்களை விளக்கி, தன்னை வித்யாபீடத்தின் ஸர்வ தேசிகனாக ஆவதற்கு தகுதி உடையவனாக ஆக்குமாறு வேண்டிக்கொண்டான். ஈஸ்வரன் ஸ்கந்தனை தக்ஷிண கைலாயத்திற்குச் சென்று வேதாஹ்வய தீர்த்தத்தின் அருகில் ஒரு சிவலிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து அந்த தீர்த்தத்தில் மலர்ந்த வெள்ளை, சிவப்பு, கறுப்பு நிறமுடைய மூன்று தாமரை மலர்களால் பூஜை செய்து தவம் செய்யுமாறு ஆணையிட்டார். அந்த மூன்று தாமரைகளும் ப்ரணவ மந்திரத்தின் மூல எழுத்துக்களான அ, உ, ம என்பதைக் குறிக்கும். ஈஸ்வரன் கூறியபடி ஸ்கந்தன் சில வருஷங்கள் தவம் செய்ததால் சங்கரன் தக்ஷிணாமூர்த்தியாக அவருக்கு காட்சியளித்தார். ஒரு கையில் 'சின் முத்ரையை' காண்பித்து, மற்றொரு கையை ஸ்கந்தனின் தலையில் வைத்து ஸகல ஞானத்தையும் அளித்தார். ஈஸ்வரன் ஸ்கந்தனை வாயுலிங்கத்திற்கு வடக்கில் உள்ள ஒரு குன்றுக்கு அழைத்துச் சென்று அங்கு மஹா வித்யாபீடத்தை ஏற்படுத்தி அதன் தத்வார்த்த தேசிகனாக ஸ்கந்தனை நியமித்தார். தத்வார்த்த தேசிகன் என்றால் பல தத்வங்களின் அர்த்தங்களை உபதேசிக்கும் ஆசான் என்று பொருள். பக்தியுடன் தன் தந்தையை பணிந்த ஸ்கந்தனின் முகம் மிகவும் ஒளியுடன் ப்ரகாசித்தது.

கைலாயத்தில் சிவனும் பார்வதியும் அழகிய ஸிம்மாஸனத்தில் உட்கார்ந்து மற்றவர்களுக்கு தர்சனம் தரும் போது ஹரியை முன்னிட்டுக் கொண்டு ப்ரம்மா, இந்திராதி தேவர்கள் பரமசிவனை தர்சனம் செய்வதற்கு முன்னால் ஸுப்ரம்மண்ய

ஸ்வாமியை தர்சித்த பிறகே சிவ பார்வதியை தரிசிக்கச் செல்வார்கள். ஆனால் ப்ரம்மா மட்டும் ஸ்கந்தனை சிறுவனாகவும், சிறிய தேவதையாகவும் நினைத்துப் புறக்கணித்தார். இதனால், தான், அவமானப்பட்டதாக நினைத்த ஸ்கந்தன், ப்ரம்மாவை ப்ரணவ மந்திரத்துக்கு அர்த்தம் கூறும்படி சவால் விட்டார். ப்ரம்மாவினால் ப்ரணவ மந்திரத்திற்கு விளக்கம் சரியாக கூற முடியாததால் கோபம் கொண்டு ஸ்கந்தன் ப்ரம்மாவை தன் ஞானத்தை இழக்கும்படி செய்தார். தன் கணவனின் நிலைக் கண்டு துணுக்குற்ற ஸரஸ்வதி, மிக தயாள குணமுள்ள சங்கரனால் மட்டும் தான் அவரைக் காப்பாற்ற முடியும் என்று எண்ணி ப்ரம்மாவை தக்ஷிண கைலாயம் சென்று தவம் செய்யும்படி வேண்டினாள். அதன்படியே ப்ரம்மா தக்ஷிண கைலாயம் சென்று தவம செய்தார். பரமேஸ்வரன் மிகவும் மகிழ்ந்து ஞானப்ரஸூனாம்பிகாவுடனும், மற்ற பூதகணங்களுடனும் வந்து ஸ்கந்தனின் அனுமதி பெற்று ப்ரம்மா இழந்த ஞானத்தை திரும்ப அளித்தார்.

முனிவர் நாரதர் கைலாயத்திற்கு ஒரு முறை வந்த போது கைலாயம் அஸாதாரணமான நிலையில் இருந்தது. குழப்பமான நிலைமையிலும் இருந்தது. மத்தளங்கள் அடித்துக் கொண்டும், சங்கு முழங்கிக் கொண்டும் இருந்த நிலை ஒரே இறைச்சலாக இருந்தது. சரியான சரீரமில்லாத குள்ளமான சிவகணங்களால் அந்த கூட்டம் நிரம்பி இருந்தது. சங்கரன் அப்போது ஸம்ஹார தாண்டவம் ஆடியதால் பூமி அதிர்ந்தது. அவர் புலித் தோல் அணிந்து கொண்டு பாம்பையும், எலும்புகளையும், மண்டையோடுகளையும் ஆபரணமாக அணிந்து கொண்டிருந்தார். தலைமுடியை விரித்து வலது காலை ஒரு சின்ன பூதகணத்தின் மேல் வைத்து நடனமாடிக் கொண்டிருந்தார். அவர் நெற்றியில் மூன்றாவது கண்ணும், கையில் நெருப்புமாக இருந்தார். அவருடைய நடனம் மிக பயங்கரமாகவும், மனதை வசீகரிக்கக்கூடியதாகவும் இருந்தது. நடனம் முடிந்ததும் அங்கிருந்து எல்லோரும் சென்றுவிட்டார்கள். மௌனம் நிலவியது. பரமசிவனின் அதிசயமான இக்காட்சியைக் கண்டு நாரதர், சங்கரனை மௌனமாக தலை வணங்கி அந்த இடத்தை விட்டுச் சென்றார்.

மஹாதேவனின் இந்த விசித்ரமான தன்மையை அறிந்து விளக்கக்கூடியவர் சங்கரனின் மகன் 'குருகுஹன்' ஒருவனே என்று நாரதர் அறிந்து கொண்டார். ஆகையால் நாரதர் மஹா வித்யா

பீடத்திற்குச் சென்று அங்கிருக்கும் குருகுஹனான தேசிகனிடம் தனக்கு ஞானத்தை அளிக்கும்படி வேண்டினார். அதைக் கேட்ட தேசிகர் நாரதரின் ஸந்தேஹங்களை கீழ்கண்டவாறு தீர்த்து வைத்தார்.

1. வயதான காளைமாடு வாஹனமாக இருப்பது ஏன் ?

காளைமாடு சிவனால் காக்கப்பட்டு வருவது ஸனாதன தர்மத்தைக் குறிக்கிறது.

2. மேரு மலையை விட்டு மயானபூமியை தேர்ந்தெடுத்தது ஏன் ? மணக்கும் சந்தனத்தை விட்டு சாம்பலை உடம்பில் பூசிக்கொள்வது ஏன் ?

அனைவரும் இறுதியில் சேரும் இடம் மயானம். உடல் அழிந்த பிறகு, எஞ்சி இருப்பது சாம்பல் தான். விபூதி மனதிற்கு ஆறுதலையும், நோய்க்கு மருந்தாகவும் அமைகிறது.

3. மண்டை ஓடும் , எலும்புகளும் கொண்ட மாலையை ஏன் அணிந்திருக்கிறார் ?

சிவபெருமான் எங்கும் நிறைந்தவர் என்றும், காலத்தை கடந்தவர் என்பதையும் குறிக்கிறது.

4. ஏன் சங்கரன் யானையின் தோலை அரையில் அணிந்திருக்கிறார் ?

சிவன் வாரணாசியில் ஒரு கஜாஸுரனை வதம் செய்தார். அவனுடைய வேண்டுகோளினால் அவனுடைய தோலை உடுத்திக் கொண்டார்.

5. அபஸ்மார அஸுரனை காலால் மிதிப்பது ஏன் ? நாகங்களை ஆபரணங்களாக அணிந்திருப்பதும், த்ரிசூலம், மான், நெருப்பு, உடுக்கை ஆகியவற்றை ஆயுதங்களாக கொண்டிருப்பதும் ஏன்?

பித்ரு வனத்தில் ப்ராம்மணர்கள் யாகம் செய்யும் போது ஒரு அழகான துணியில்லாத ஒரு பிச்சைக்காரனைப் பார்த்து, அவர்கள் மனைவிகள், அவருடைய செல்வதைப் பார்த்து கோபம் கொண்டார்கள். அவர்கள் மான், மழு, உடுக்கை, நாகம் எல்லாவற்றையும் மந்திரம் செய்து அந்த பிச்சைக்காரன் மேல் ஏவினார்கள். அந்த பிச்சைக்காரன், சிவனாகையால் அவர் அதை தன்

ஆயுதங்களாக தன் கையில் ஏந்திக் கொண்டார். ப்ராம்மணர்களிடமிருந்து விடுபட்ட குள்ள பூதகணங்கள் (சிவனைச் சுற்றி) அந்த பிச்சைக்காரனைச் சுற்றி நடனமாட ஆரம்பித்தார்கள். அப்போது அபஸ்மார என்ற அஸுரனை தன் காலின் கீழே போட்டு அடக்கினார். அப்போது தான் ப்ராம்மணர்கள் அவர் சங்கரன் என்று அறிந்து அவரை வழிபட்டார்கள்.

இவ்வாறு குருகுஹன் சொன்ன விளக்கத்தைக் கேட்டு ஸந்தேஹம் நீங்கிய நாரதர் சங்கரனைப் பற்றி பாடிக் கொண்டும், துதித்துக் கொண்டும் சென்றார்.

## அத்யாயம் - 7
## ''ஸ்ரீ'' - ''காள'' - ''ஹஸ்தி''

ரோமச மாமுனியிடம், பரத்வாஜ முனிவர் ''ஸ்ரீ காளஹஸ்தி'' (திருக்காளத்தி) என்று இவ்விடத்திற்கு பெயர் வரக்காரணமாயிருந்த 'ஸ்ரீ' என்னும் பெயரைக் கொண்ட சிலந்தியைப் பற்றியும், 'காளன்' என்ற நாகத்தைப் பற்றியும், 'ஹஸ்தி' என்னும் யானையைப் பற்றியும், இம்மூன்றும் எம்பெருமானின் மீது கொண்ட பக்தியையும் விளக்குமாறு கேட்டுக் கொண்டார். மாமுனியும் அவர் தம் வேண்டுகோளுக்கிணங்கி தம் திருவாய் மலரத்தொடங்கினார்.

தமிழ் நாட்டில் தாம்ரபரணி தீரத்தில் வாழ்ந்து வந்த ''ஸத்யஸாகர'' என்னும் அந்தணனுக்கு முன் வினையின் பயனாக தீய எண்ணங்களைக் கொண்ட ஒரு மகன் பிறந்தான். அந்தணர் குலத்தின் மீதே நம்பிக்கையற்ற அவன், வீடு துறந்து, கொங்கை நாட்டிற்குச் சென்று, நெசவுத் தொழில் செய்யும் ஒருவரை சரணடைந்து ''கரம்பன்'' என்று தன் பெயரை மாற்றிக் கொண்டு, நெசவு குலப் பெண்ணையும் மணந்து கொண்டு, சிறந்த தான தர்மங்களில் ஈடுபட்டு இல்லற இலக்கணத்திற்கு தக்கவாறு வாழ்ந்து வரலானான். இதனால் அவன் புகழ் பரவத் தொடங்கியது. அவன் வயது முதிர்ந்து, மரணத்தின் பிடியில் இருக்கும் போது, ஓர் அந்தணன், கரம்பனை அணுகி, சிவலிங்கத்திற்காக ஒரு துணியை அளிக்குமாறு வேண்டினான். அவனும் த்ருப்தியுடன் மிக விலையுயர்ந்த துணியை தானமாக அளித்தான். மரணத்தை தழுவும் போதும் கூட நெசவுத் தொழிலின்

அழகைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்ததால், அவன் மறு பிறப்பில் வலை பின்னும் சிலந்தியாக பிறந்தான். நல்லதோர் ஆடையை, சிவலிங்கத்திற்கு தானமாக அளித்ததால், எம்பெருமானின் மீது பக்தி கொண்ட ''ஸ்ரீ'' என்னும் சிலந்தியாக பிறந்தான்.

நிதமும், அது, ஸ்வர்ணமுகி நதியில் நீராடி, வாயு லிங்கத்தை பல முறை வணங்கி, தன் உடலிலிருந்து சுரக்கும் ஒருவித த்ரவத்தின் உதவியால், எம்பெருமானுக்காக விதவிதமான மண்டபங்களையும், கோபுரங்களையும் அழகிய ஸிம்மாஸனங்களையும் உருவாக்கி மனம் மகிழும்.

திருக்காளத்தியில், ஞானாம்பிகை ஸமேதராக எழுந்தருளியிருக்கும் திருக்காளத்தீஸ்வரனை வணங்குகிறேன். மமதை கொண்ட மன்மதனை எறித்த மஹாதேவனை வணங்குகிறேன். தீப்பிழம்பிலிருந்து தெறிக்கும், தீப்பொறிகளைப் போல பரப்ரம்மத்திடமிருந்து ஜீவன்களை உருவாக்கும் முக்கண்ணனை வணங்குகிறேன்! பக்தர்களுக்கு முக்தியளிக்கும் உமாபதியை வணங்குகிறேன்! நான் இறுதியில், உம்மிலே கலக்க வேண்டும் என்றெல்லாம் வாயுலிங்கத்திடம் வேண்டிக் கொண்டது. இறைவனும் அதன் பக்தியை மெச்சி அதற்கு, தம்முள்ளே கலக்கும் பாக்யத்தை அளித்தார். மேலும், முக்கண்ணன், சிலந்தியின் பெயரான ''ஸ்ரீ'' என்னும் நாமத்தைக் கொண்டவராயும் விளங்கி, சிலந்தியின் பக்தியை மேன்மையுறச் செய்தார்.

முன்னொரு காலம், மலைய மலைத் தொடரின் அருகில் வாழ்ந்து வந்த ஏழை அந்தணன் ஒருவன் பிறரிடம் ஊதியம் பெற்றுக் கொண்டு, பூஜை முதலான வைதிக கார்யங்களை செய்து வரலானான். சிறிது காலத்திற்கு பிறகு, ஒரு பாம்பினால் கடிக்கப்பட்டு இறந்தான். மறு பிறவியில், சிறந்த வலிமையுடைய யானையாகப் பிறந்து, சிவபெருமானிடம் சிறந்த பக்தியுடையதாயும், பில்வ இலைகளாலும், தாமரைப் பூக்களாலும் வாயுலிங்கத்தை அர்சித்து வந்தது.

இது இவ்வாறிருக்க, இமயமலைக் குகையில், நல்ல வேத சாஸ்த்ரங்களை அறிந்த, எம்பெருமானின் மீது பக்தி கொண்டவனான ஒரு அந்தணன் வாழ்ந்து வந்தான். அவன், ஒரு

சமயம், விலையுயர்ந்த பலவித ஜாதி வைரங்களைக் கொண்டு கந்தர்வர்கள் செய்யும் சிவபூஜையைக் காண நேர்ந்தது. ஆவல் பொங்க, இந்த பூஜை செய்ததால் பெரும் பயன் யாது என கந்தர்வர்களை வினவினான். அவர்களும், இவ்வாறு பூஜை செய்வதன் மூலம் இப்பிறப்பிலேயே கைலாயத்தை அடைய முடியும் என பதிலளித்தார்கள். இத்தகைய வைரங்களை எவ்வாறு அடைவது என வினவிய போது, பாம்பாகப் பிறப்பதன் மூலம், நாகலோகத்திலிருந்து பலவகையான வைரங்கள் கிடைக்கப் பெறலாம். அந்தணனும், கைலாயத்தை அடைய ஆசைக் கொண்டு அரவமாக பிறப்பெடுத்தான். தினமும், காலையில் தன்னிடமுள்ள வைரங்களைக் கொண்டு வாயுலிங்கத்தை வழிபட்டு வந்தான்.

மதிய வேளையில், சிவபெருமானிடம் அதிபக்தி கொண்ட யானையானது வாயுலிங்கத்தின் தர்சனத்திற்காக சென்ற போது, லிங்கத்தின் மீது வைர கற்கள் இருப்பதைக் கண்டு, இந்த கற்களின் பாரத்தை எம் தலைவன் எவ்வாறு தாங்குவான் ? என எண்ணி, கற்களை அப்புறப்படுத்தி, மென்மையான மலர்களைக் கொண்டும், இலைகளைக் கொண்டும் அர்சித்து வந்தது.

தான் செய்யும் பூஜையை கலைத்து தன் விருப்பப்படி, யானை செய்யும் வழிபாட்டினைக் கண்ட நாகம் கொதித்தெழுந்தது. இதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டும் என தீர்மானித்துமாசி மாதம், ஏகாதசி தினத்தில், யானை வாயுலிங்கத்தை பில்வ இலைகளினால் அலங்கரிக்கும் போது, அங்கு மறைந்து கொண்டிருந்த நாகம், யானையினது தும்பிக்கை வழியாக, மூக்கினை அடைத்து, பின்னர் தலையை அடைத்து, அதன் உடலுள் தன் விஷத்தை செலுத்தியது. விஷத்தின் வீர்யத்தினால் துடிதுடித்த யானை, தான் இறந்தாலும் கவலை இல்லை, தன் எதிரியை எவ்வாரேனும் அழித்தாக வேண்டும் என்ற உறுதி பூண்டு பாறையின் மீது தன் தலையை மோதி நாகத்தைக் கொன்று, தானும் இறந்தது. உடனே இருவரும் தேவர்களாக உருமாறி பிறைச் சந்திரனை நெற்றியில் அணிந்தவர்களாக மாறினர். அந்தத் திங்கட்கிழமையன்று, இறைவனும், தேவி ஞானப்ரஸூனாம்பிகை ஸமேதராக வாயுலிங்கத்திலிருந்து வெளிப்பட்டார். அதே சமயம் ப்ரம்மனும், திருமாலும், கணபதியும், தேவ ஸேனாபதியும், தம் தம் வாஹனங்களுடன் காட்சியளித்தனர். ப்ருங்கி, வஸிஷ்டர் போன்ற முனிவர்களும், இந்திரன், கந்தர்வர்கள் போன்ற லோகபாலர்களும்

அவ்விடம் வந்து சேர்ந்தனர்.

''காளன்'' என்ற நாகமும், ''ஹஸ்தி'' என்ற யானையும் சேர்ந்து இறைவனை பலவாறு புகழத் தொடங்கின. ஓ! சங்கர! அன்புள்ள ஹைமவதியின் தலைவனே! உருவாக்குதல், காத்தல், அழித்தல் போன்ற முத்தொழில்களைக் கொண்டவனே! ப்ரணவத்தின் பொருளாக நிற்கின்றாய்! அனைத்துக் கடவுளர்களுக்கு தலைவனாக இருப்பதனால் நீயே மஹாதேவனாவாய்! எல்லாவிடத்திலும் ஸர்வ வ்யாபியாக நிறைந்து நிற்கின்றாய்! வேதங்களினால் அறியமுடியாத நின்னை, ஜந்துக்களான எம்மால் எவ்வாறு அறியமுடியும் ? ஓ! பிதாவே! உம்மை சரணமடைந்தோம்! காத்தருள்வாயாக! என பணிந்து நின்று வேண்டினார்.

அவர்களது பக்தியினால் மன மகிழ்ந்து, இறைவன் வேண்டிய வரங்களை யாம் அளிக்கின்றோம் என அருளினார். அவையும் நாங்கள் இருவரும் வாயுலிங்கத்திலே கலக்க வேண்டும்! இந்த புனிதத் தலமும், மலையும், என்றும், எமது பெயரைக் கொண்டு விளங்க வேண்டும்! நாங்கள் இருவரும் முக்தியடைய வேண்டும்! இவ்விடத்தில் வழிபாடு செய்யும் அடியோர்கள் காள தீர்த்தத்திலும், ஹஸ்தி தீர்த்தத்திலும் நீராடி, வைரங்களைக் கொண்டும் அல்லது பில்வ இலைகளாலும் பூஜை செய்வார்களேயானாலும், அவர்களும் நிச்சயம் முக்தி அடைய வேண்டும்.

இப்போது, இங்கே வந்திருக்கும் அனைத்து கடவுளர்களும் எப்போதும் இங்கேயே இருந்து கொண்டு அருள் பாலிக்க வேண்டும் என வேண்டி நின்றனர்.

மலர்ந்த முகத்துடன் இறைவன் அவர்கள் வேண்டிய வரங்களை அளித்து, அருளி, இவ்வாறு தம் திருவாய் மலர்ந்தருளினார். ''உம்மைப் போன்றே, எம்மிடம் பக்தி கொண்டு எம்முன் கலந்த 'ஸ்ரீ' என்னும் பெயர் கொண்ட 'சிலந்தி' வேண்டியதன் காரணமாக இந்த புனிதத் தலம் இனி ''ஸ்ரீ காளஹஸ்தி'' என்று அழைக்கப்படும். யாமும் இனி ''ஸ்ரீ காளத்தீஸ்வரன்'' என நாமம் கொண்டவராய் காட்சியளிப்போம். இங்குள்ள மலைத்தொடரும் ''ஸ்ரீ காளஹஸ்தி கிரி'' என்னும் நாமமுடையதாய் விளங்கும் என ஆசீர்வதித்தார்''.

# அத்யாயம் - 8
# பக்த கண்ணப்பன்

ரோமச முனிவர், பரத்வாஜ முனிவரின் வேண்டுகோளுக்கிணங்கி, பாமரனாக இருந்தாலும், வேத சாஸ்த்ரங்களை கற்று அறியாதவனாக இருந்தாலும், தனது பக்தியின் மூலமாக இறைவன் முக்கண்ணனையே ஆட்கொண்டுவிட்ட பக்த கண்ணப்பனின் சரித்ரத்தை கூறத் தொடங்கினார்.

முன்னொரு சமயம் மணிமந்தன் என்னும் யக்ஷன் தங்கத்தினாலான ரோமங்களைக் கொண்டதும், வைரங்களைப் போல் ஒளிர்விடும் புள்ளிகளைக் கொண்டதுமான அழகிய மானைக் கொல்லத் தொடங்கினான். இக் கொடூரமான செயலைக் கண்ட நந்தி தேவர் சினம் கொண்டு ''குபேரனது அழகிய மானைக் கொன்ற கொடியோனே! இறைச்சி உண்ணும் கொடிய வேடனாகப் பிறக்கக் கடவாய்!'' என சபித்தார். தன் செய்கையை எண்ணி வருந்திய யக்ஷனுக்கு, நீ பூலோகத்தில் வாழும் போது, சிவபெருமானின் பக்தனாக உனக்கு ஒரு மகன் பிறப்பான். உடனே முக்தி பெருவாய் என அவனுக்கு சாப விமோசனம் அளித்தார். அவ்வாறே, அவனும் தீர்ணனாக இந்த மண்ணில் பிறந்து, திருக்காளத்தியின் அருகில் உள்ள ஒரு க்ராமத்தில் வாழ்ந்து வந்து, 'கனிஷா' என்னும் பாவையை மணந்து, பெரிய கண்களைக் கொண்ட 'கண்ணா' என்னும் மகனைப் பெற்றான். உடனே அவன் சாபம் தொலைந்து, குபேர லோகத்தை அடைந்தான்.

கண்ணப்பன் தன் இளம் ப்ராயத்தில், ஒரு முறை தன் நண்பர்களோடு கானகத்தில் விளையாடிக் கொண்டிருக்கும் போது, ஒரு பன்றியினைத் துரத்திச் சென்று பிடிக்க முயன்றான். இம்முயற்சியினில் மற்ற சிறுவர்கள் அனைவரும் தோல்வியுற்ற போது கண்ணப்பன் மட்டும் உறுதி பூண்ட மனத்தினனாய் பன்றியின் பின்னாலேயே ஓடிக் கொண்டிருந்தான். திடீரென்று அந்த பன்றி அங்கிருக்கும் சிவலிங்கத்திடம் சென்று அதனுள் கலந்தது. இக்காட்சியைக் கண்டவனுக்கு தன் உடல் முழுவதும் ஏதோ ஒரு இறையுணர்வு ஏற்பட்டிருந்ததை உணர்ந்தான். அன்றிலிருந்து அவன் நாள்தோறும் நீராடி, பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்து, தன் வாய் நிறைய நீர் நிரப்பிக் கொண்டு, சில பில்வ இலைகளையும் பறித்து, நல்ல சுவையுள்ள

இறைச்சியையும் இறைவனுக்கு அர்பித்தான். இவ்வாறு சில மாதங்கள் கழிந்தன.

ஒரு சமயம், ப்ரதோஷ காலம் அன்று எம்பெருமான் கண்ணப்பனின் பக்தியை அங்கு வந்திருந்த முனிவர்களுக்கு காட்ட நினைத்தான். திடீரென பூகம்பம் ஏற்பட்டு கர்பக்ருஹத்தின் மேல் உள்ள கூரை பிளந்து கீழே விழத் தொடங்கியது. இதனைக் கண்ட முனிவர்கள் அனைவரும் வெளியே ஓடி வந்து விட்டனர். அனால் கண்ணப்பன் மட்டும் தன் உயிரையும் பொருட்படுத்தாது இறைவனுக்கு ஒரு சேதமும் ஏற்படாதவாறு தன் உடலினால் லிங்கத்தை அணைத்துக் கொண்டான். எம்பெருமான் சேவையில் மரணம் ஏற்படுமானால், அதைவிடச் சிறந்தது வேறொன்றுமில்லை என நம்பினான் கண்ணப்பன். இக் காட்சியினைக் கண்ட முனிவர்கள் வியந்து, இந்த வேட்டுவனின் புகழ் பாடிச் சென்றனர். இறைவனது கருணையினால் கண்ணப்பனுக்கு எந்த விபத்தும் ஏற்படவில்லை.

அர்ஜுனனே தன் மறு பிறப்பில் கண்ணப்பனாக பிறப்பெடுத்தான் என்பதை நாம் தெலுங்கு மஹாகவி ''தூர்ஜடி'' வழியாக அறியலாம். முற்பிறப்பின் ஞானத்தைக் கொண்டவனாக நித்தமும் தன் உடலின் பதினைந்து பாகங்களின் மீது மூன்று கோடுகளாக திருநீரணிந்தும், ருத்ராக்ஷத்தையணிந்து கொண்டும் எப்போதும் காணப்பட்டான். மூப்பு அடைந்ததும் தன் மகன் 'காலனை' வேட்டுவத் தலைவனாக்கி, சிவபெருமானை வழிபடுவதையே தன் தொழிலாகக் கொண்டான்.

ஒரு சமயம் பல்குன மாதத்தில், சந்திர க்ரஹணத்தின் போது, திருக்காளத்தியில் முனிவர்கள் பலர் கூடியிருந்தனர். அப்போது கண்ணப்பன் தன் இஷ்ட தெய்வத்திற்கு நித்ய பூஜை செய்வதற்காக லிங்கத்தை அணுகினான். இக்காட்சியினை முனிவர்கள் பலர் காணலானார்கள். திடீரென லிங்கத்தின் இடது கண்ணிலிருந்து கண்ணீரும், குருதியும் வழியத் தொடங்கின. இவ்வேடுவனின் வைதிகமல்லாத, முறையற்ற பூஜைகளின் அறிகுறியே இது என முனிவர்கள் நினைத்தனர். பரம்பொருளின் இந்நிலை கண்டு அதிர்ந்த வேடன், இதற்கோர் வழி செய்ய வேண்டும், பக்தர்களைக் காக்கும் பரமசிவனுக்கு நல்லதொரு கண் பார்வை இருப்பது அவச்யம் என நினைத்து, தன் அம்பறாத்தூணியிலிருந்து, அம்பை எடுத்து, தன் ஒரு

கண்ணினைப் பிடுங்கி எடுத்து இறைவனுக்கு பொருத்தினான். கண்ணும் சரிவர பொருந்திருக்கக் கண்டு உளம் மகிழ்ந்தான். ஆனால் அந்த மகிழ்ச்சி நீடிக்காமல், மற்றொரு கண்ணிலிருந்து குருதி பாயத் தொடங்கியது. ஓ! கடவுளே! உனது இந்நிலையைக் காண என்னால் இயலவில்லை. எனது இந்த உடலே உனக்குச் சொந்தமான போது, எனது மற்றொரு கண்ணையும் உமக்குக் கொடுக்கிறேன். மேலும், கண் பார்வையற்ற போதும் என்னால் காடுமுழுவதும் அலைந்து திரிய முடியும். எனது இரண்டாவது கண்ணை நீ பொருத்திக் கொண்டால் நீ மிகவும் அழகாகத் தோன்றுவாய் என்று தெய்வத்தின் முன் நின்று கதறினான். தன் இரண்டு கண்களையும் இழந்த பின்னர், மற்றொரு கண்ணை எவ்வாறு பொருத்துவது என்ற வினா அவனுள் எழுந்தது. பாதரக்ஷை தாங்கிய தன் ஒரு காலை லிங்கத்தின் குருதி வழியும் ஒரு கண்ணின் மீது வைத்து, தன் மற்றொரு கண்ணை அம்பினால் தோண்டத் தொடங்கினான். அப்போது இறைவன் அவன் முன் தோன்றி ''ஓ! கண்ணப்பனே! நில்! இது எம் திருவிளையாடல்களில் ஒன்று. நினது பக்தி மெச்சத் தகுந்தது. நீ மறுபடியும் பார்வை கிடைக்கப் பெறுவாய்! உனது புகழ் எப்போதும் நிலைத்து இருக்கட்டும். கைலாய மலையில் வாழ்ந்து கொண்டு எனது தர்சனத்தை எப்போதும் காணக் கடவாய்! நீ உபயோகித்த குளம் மோக்ஷத்தைக் கொடுக்கும், பக்தி முக்தி தீர்த்தமாக விளங்கும். உனது பிறப்பின் மேன்மையை அறிந்து கொண்டவர்கள் கைலாயத்தை அடைவார்களாக! நீ ஐந்து வருடகாலம் இவ்வாறே சேவை புரிந்து, பல்குன மாதத்தில், பௌர்ணமி நன்னாளில் என்னை அடைவாயாக!'' என ஆசீர்வதித்தார். பக்தி வெள்ளத்தில் மூழ்கிய கண்ணப்பன், தனது தலைவனது பாதாரவிந்தங்களில் விழுந்து ஸேவித்தான். சூழ்ந்திருந்த முனிவர்கள் அனைவரும் பக்தி ஒன்றே மோக்ஷத்தை அடைய சிறந்த மார்கமாகும். ஓ! கண்ணப்பரே! உனது பக்தியின் மேன்மையை நாங்கள் அறிந்து கொண்டோம் என்றுரைத்து அவனை வணங்கி தம் வழி சென்றனர்.

## அத்யாயம் - 9

# தக்ஷ யக்ஞம்

தக்ஷப்ரஜாபதி, தனது அறுபது மகள்களை தேவர்களுக்கும், கடைசி மகளான ஸதி தேவியை சங்கரனுக்கும் மணமுடித்து வைத்தார். ஒரு சமயம் சங்கரன், ஸதி தேவியுடன் ரத்ன ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்து கொண்டு, தேவர்களுக்கும், முனிவர்களுக்கும், யக்ஷர்களுக்கும், கின்னரர்களுக்கும் காட்சியளித்துக் கொண்டிருந்தார். அச்சமயம் தன் மகளைக் காண வேண்டி தக்ஷன் அங்கு வந்தார். அவரைக் கண்டதும் அனைவரும் எழுந்து நின்று தம் வணக்கங்களைத் தெரிவித்தனர். சங்கரன் மட்டும்வணக்கம் செய்யாமல் அமர்ந்திருந்தார். இதனால் கோபம் கொண்ட தக்ஷன், மனக்கசப்புடன் சங்கரனைத் திட்டிக் கொண்டே அவ்விடத்தை விட்டு வெளியேறினார். இதன் காரணமாக தக்ஷனுக்கு, தன் மருமகன் மீது வெறுப்பு ஏற்பட்டது.

சிறிது காலத்திற்குப் பின்னர், தக்ஷன் பெரியதொரு யாகத்தை நடத்த விரும்பி, அனைத்து தேவர்களுக்கும், முனிவர்களுக்கும், அரசர்களுக்கும் அழைப்பு விடுத்தான். வேண்டுமென்றே சங்கரனை நிராகரித்தான். ஆனால் ஸதி தேவியானவள், தனது பெற்றோர்களையும், ஸஹோதரிகளையும், மற்ற உற்றார் உறவினர்களையும், காண்பதற்காக யாகத்தில் கலந்து கொள்ள விரும்பினாள். அழையா விருந்தாளியாக யாகத்தில் கலந்து கொள்வது முறையன்று என சங்கரன் முதலில் சக்தி தேவிக்கு எச்சரிக்கை செய்தார். அவள் தன் எண்ணத்தின் மீது பிடிவாதமாக இருக்கவே, மனம் இல்லாமல், மனக்கசப்புடன் விடை கொடுத்தார். அவள் யாகசாலைக்குச் சென்ற போது, ஒருவரும், ஏன் அவளது தாயும், ஸஹோதரிகளும் கூட, அவளைக் கண்டும் காணாமல் இருந்தனர். தந்தையின் அருகே சென்ற போது அவர் சினத்தால் கண்கள் சிவக்க, கோபத்தால் உடல் கொதிக்க, அவளை நோக்கி, 'எங்கு வந்தாய் ? அந்த மானம் கெட்ட பிக்ஷாடனனும், மயானத்தில் அலைபவனும், பிணத்தின் சாம்பலை பூசிக்கொள்பவனும், பூதங்களை துணையாக கொண்டவனும், ஆடையற்று, ஸர்பங்கள் உடலின் மீது தவழ்ந்தாட இருப்பவனுமான உனது கணவன், பிக்ஷா பாத்ரத்துடன் வெளியில் காத்துக் கொண்டிருக்கின்றானோ ? அந்த மானம் கெட்ட சங்கரன்,

பிச்சை வாங்கி வருவதற்காக உன்னை எம்மிடம் அனுப்பினானா ? சொல்!' என ஆவேசத்துடன், தன் கோபக்கனலைத் தெறித்தார். உள்ளத்தின் ஆழத்தில் ஏற்பட்ட வெறுப்பினால் உமிழ்ந்த, அவன் சொற்களைக் கேட்டு அனைவரும் மௌனமாயினர். ப்ருகு முனிவர் தனது நீண்ட ஜடா முடியை தடவிக் கொண்டு இருக்கையில், ஸூர்யன் பற்கள் வெளியில் தெறியுமாறு உரக்கச் சிரித்தான்.

இந்தப் பெரிய அவமானத்தை தாங்கமுடியாமலும், தனது கணவன் மீது பொழியும் இழிவுரைகளை கேட்கமாட்டாமல் ஸதி தேவியானவள், தன் இரு கரங்களால் காதுகளை பொத்திக் கொண்டு, ''சிவ சிவ'' என அலறலானாள். இனியும் தக்ஷனது மகளாக வாழக் கூடாது என முடிவு செய்தாள். அவள் ''யோகாக்னியாக'' உருவெடுத்து தவத்தினில் மூழ்கினாள். இதனைக் கண்ட அவளது தாயும், தமக்கைமார்களும் வீறிட்டு அழ, தக்ஷன் ஒன்றும் புரியாமல் திகைத்து நின்றார். இதனால் யக்ஞத்திற்கு தடை ஏற்பட்டது.

நடந்ததையறிந்த சங்கரன் அதிர்ச்சியடைந்தார். அவரது முகம் சிவந்து இறுகிப் போனது. உடல் வெண்மை நிறத்தினை உடையதாயிற்று. மனக்கசப்புடன் அழத்தொடங்கினார். திடீரென துக்கம் கோபமாக மாறி, கண்கள் அக்னி பிழம்பங்களாக மாறின. தனது, ஜடா முடியிலிருந்து, ஒரு முடி இழையைப் பிடுங்கி, ஒரு பாறையின் மீது ஓங்கி அடித்தார். உடனே பெரிய எரிமலை பீறிட்டு எழுந்து, அந்த அக்னி ஜ்வாலைகள் ஒன்று சேர்ந்து, அனைத்து சக்தி ஒருங்கே கொண்ட ஒரு உருவம், கையில் வாளுடன், வெளி வந்தது. சிவனது கோபாக்னியின் வெளிப்பாடே வீரபத்ரன் என்னும் நாமம் கொண்ட அந்த உருவம். தன் கடமை உணர்ந்த வீரபத்ரன், பல பூதகணங்களோடு, மின்னல் வேகத்தில், யாகசாலையை அடைந்தான்.

அனைத்தையும் எரித்தும், நாசப்படுத்தியும், ப்ருகு முனிவரின் மீசையையும், தாடியையும் அறுத்தும், பல மஹரிஷியின் கண்களைப் பிடுங்கியும், ஸூர்யனது பற்களை முஷ்டியால் அடித்து நொருக்கியும், மற்ற தேவர்களை பயமுறுத்தியும் கோஷம் போட்டனர். அவர்கள் தேவேந்திரனின் தலையின் மீது நடனமாடியும், யமகிங்கரர்களை உதைத்தும் துன்புறுத்தலானார்கள். இந்த யாகமானது ஒரு மானின் உருவத்தோடு தப்பிச் செல்ல முயன்ற போது, அதைச் செல்ல விடாமல் தடுத்து நிறுத்தினர். வீரபத்ரனது, பலம் கொண்ட

வாள் வீச்சால், தக்ஷனது தலை, உடம்பினின்று கழன்று, உருண்டு உருண்டு யாககுண்டத்தில் சென்று விழுந்தது. யாகசாலையின் நடுவே தலையில்லா முண்டமாக நின்று கொண்டிருந்த தக்ஷனின் உடலினின்று குருதி பெருக்கெடுத்தோடியது. செய்வதறியாது யாவரும் திகைத்து நின்றிருக்க, பூதகணங்கள் மட்டும், தாம் வந்த கார்யம் முடிவுற்றது என ஆரவாரம் செய்து கொண்டிருந்தன. ஒருவன், ஒரு ஆட்டின் தலையை வெட்டி, தக்ஷனின் உடலுக்கு பொருத்தினான். ஆட்டின் கண்களோடு விழித்துக் கொண்டிருந்த தக்ஷன், சிவனது மன்னிப்பிற்காக ஏங்கி நின்றான். அந்தச் சூழ்நிலையில், சிவபெருமான் அங்கு தோன்றினார்.

அனைத்து தேவர்களும் இறைவனின் கருணைக்காக, வேண்டி நின்றனர். பற்களை இழந்த ஸூர்யனும், பெருமான் முன் தலை தாழ்ந்து நின்றான். அவனது வெப்பமும், ஒளியும் மறைந்து, ஒருவித நடுக்கத்துடன் நின்று கொண்டிருந்தான். பரிவு கொண்ட பரமேஸ்வரன், அவனை தக்ஷிண கைலாயத்தையடைந்து, வாயு லிங்கத்தை வழிபட்டு, தவம் புரியுமாறு அருள் செய்து மறைந்தார். இறைவனின் அருளுரையின்படி அவன் வாயுலிங்கத்திற்கு ஸூர்ய புஷ்கரணியிலிருந்து, தீர்த்தம் எடுத்து, அபிஷேகம் செய்து வழிபட்டு வந்தான். சிறிது காலத்திற்குப் பின்னர், சிவசங்கரன், வாயு லிங்கத்தினின்று தோன்றி, ஸூர்யன் இழந்த ஒளியை திரும்பக் கொடுத்து அருளினார். அன்று முதல் , ஸூர்ய புஷ்கரணியிலிருந்து கொண்டு வரப்பட்ட தீர்த்தத்தாலேயே, வாயுலிங்கத்திற்கு அபிஷேகம் நடைபெற்று வருகின்றது.

## அத்யாயம் - 10

# ஸ்ரீ ஞானப்ரஸூனாம்பாள்

ஸர்வேஸ்வரன், ஒரு சமயம், தனது பத்னியோடும் பல தேவாதி தேவர்களெல்லாம் சூழ, ஆனந்தமாக ஸபையினிலே வீற்றிருந்தார். யௌவனத்தினாலும், சிறந்த ஆபரணங்களின் காரணமாக ஏற்பட்ட காந்தியோடு, ஒளி வீசிக் கொண்டிருந்த அன்னை உமை, தன் தலைவனது தாள்களை வணங்கி, ''நாயக! தேவர்களில் யார் மிக உயர்ந்தவர் ? மந்திரங்களில் எது தலையானது ? அதைப் பெறத் தகுதியானவர் யார் ? என வினவினாள். உமைநாதனும் புன்முறுவல்

தவழ, வேதங்களின் நடுவே அமைந்துள்ள சிவ பஞ்சாக்ஷரியே சிறந்த மந்திரமாகும். அதனைப் பெறவேண்டிய தகுதி அனைத்தும் தனக்கேயுள்ளது எனவும் செப்பினார். தனக்கு அம்மந்திரத்தை உபதேசிக்கும்படி தாபத்துடன் உமையவள் கேட்க ராஜசிக குணம் கொண்ட தன் நாயகி மந்திரோபதேசம் பெற தகுதியற்றவள் என பதிலுரைத்தார். விடாது, தன் கணவனை மன்றாட பவானியிடம் பரிவு கொண்ட ஈஸ்வரன் மந்திரத்தின் முதலிடமான மௌன தீக்ஷைக்கு மெல்ல, மெல்ல அழைத்துச் சென்றார்.

சங்கரி, தன் ராஜசிக குணத்தினால் ஏற்பட்ட அறியாமையின் காரணமாக, தன் பணிப்பெண் மாலினியிடம், தனது நாதன், பஞ்சாக்ஷரி மந்திரம் உபதேசிக்க முன் வந்ததைப் பற்றிக்கூறி மௌனத்தைக் கலைத்தாள். தனது ஞானத்தினால், இதனையுணர்ந்த பெருமான், மானிட பெண்ணாகப் பிறக்குமாறு சபித்தார். தனது செயிகையின் விபரீதத்தை உணர்ந்த அன்னை , தனக்கு சாப விமோசனம் அளிக்குமாறு மன்றாடினாள். அவள் மீது, கருணை கொண்ட சங்கரனும், தனது நாயகியை திருக்காளத்திக்குச் சென்று ஸாத்விக குணம் பெறும் வரை தவநெறியில் சிறந்து விளங்குமாறு பணித்தார். காலம் கனியும் போது, தாம் அங்கு எழுந்தருளி ஐந்தெழுத்து மந்திரத்தை உபதேசித்து அவளை ஆட்கொள்ளுவார் என்றும் செப்பினார்.

மானிட வடிவம் கொண்ட தேவியானவள், பூலோகத்திற்கு வந்து இமாலயக் காட்டுகளில் அங்கும் இங்கும் திரிந்த பின்னர் நாரத மஹரிஷியின் அறிவுரையின்படி, கணபதி துணையுடன் ''ஸ்வர்ணமுகி'' நதிக் கரையை அடைந்தாள். அப்போது, பரமேஸ்வரன் கிழவடிவம் பூண்டு, தேவிக்கு உதவி செய்யும் எண்ணம் கொண்டு வாயுலிங்கத்திற்கு, தென்மேற்கில் உள்ள ''விக்ஞான க்ஷேத்ரம்'' என்னும் தலம், தவம் செய்ய சிறந்ததாகும் என வழிகாட்டினார். கிழ ப்ராம்மணர் சொற்படி, அவ்விடத்திலேயே தங்க விருப்பம் கொண்டு ''கௌரி தீர்த்தம்'' என்ற தீர்த்தத்தை, நீராடலுக்காக உருவாக்கி தெய்வீகத்துடன் விளங்கும் பத்தாயிரம் அகண்ட பில்வ இலைகளைக் கொண்டு பூஜித்து வந்தாள். பின்னர், காற்றை மட்டும் ச்வாஸிக்கும் தனது தீவிர தவத்தினை பாதுகாக்குமாறு, 'துர்கையை' வேண்டினாள். துர்கையின் கடமையுணர்ச்சியை சோதிக்க விரும்பிய இறைவன் ப்ரளயத்தை உருவாக்கிய போது, ஸிம்மவாஹினியானவள்

அனைத்து நீரையும் தன் உள்ளங்கையினில் அடக்கி குடித்து, அனைவரையும் ரக்ஷித்தாள். இதனால் 'ஹஸ்தஸ்த ஸாகர' எனவும் துர்கை அழைக்கப்படுகிறாள். இவை ஏதும் அறியாத பார்வதி தேவி ப்ராணாயாமத்தின் மூலம் தனது மூச்சினை அடக்கி, குண்டலினி, ப்ரம்மா, விஷ்ணுக்ரந்திகளைக் கடந்து, ருத்ரக்ரந்தி என்னும் சக்தியை அடைந்தாள். நூறு ஆண்டுகளுக்கு பின்னர், புஷ்ய பௌர்ணமி நன்னாளில் நந்தி வாஹனத்தில் தேவிக்கு தர்சனம் கொடுத்து ஆட்கொண்டார். அவளது மெலிந்த உடலைக் கண்டு, பரிவு கொண்ட அண்ணல், தன் தேவியை ஆகாசகங்கையில் நீராடும்படி செய்து புத்தொளி பெறச் செய்தார்.

ஸாத்விக குணம் அடைந்த தன் நாயகிக்கு, பெருமான் பஞ்சாக்ஷரி மந்திரத்தை உபதேசிக்க தொடங்கினார். ஏழு கோடி மந்திரங்களிலே சிறந்த ''சிவ பஞ்சாக்ஷரி'', வேதங்களிலும், சிவாகமத்திலும் நடுநாயகமாக விளங்குகிறது. ''ஓம்'' என்ற எழுத்துடன் சேர்த்து ஆறு எழுத்துக்களைக் கொண்டது. சாதி, சமயமின்றி, நாள் நக்ஷத்ரம் ஏதும் பார்க்காமல், யார் வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும், இம்மந்திரத்தை ஜபிக்கலாம். இவ்வாறு தேவிக்கு, பலவித தீக்ஷைகளை அளித்து, முடிவில் ''பஞ்சாக்ஷரியை'' உபதேசித்து, 'சிவஞானத்தைப் ' பெறச் செய்தார்.

அம்மை, ''ஞானாம்பிகா'', வாயு லிங்கத்தின் அருகில் அமர்ந்து, பஞ்சாக்ஷரியை, ஐம்பது லக்ஷம் முறைகள் பாராயணம் செய்ததன் விளைவாக, ஞானஒளி ப்ரகாசிக்க ''ஸ்ரீ ஞானப்ரஸூனாம்பாள்'' என்ற திருநாமம் பெற்று கொலுவிருக்கிறாள். துர்கையும் தனது கருநிறம் மாறி, ஸ்வர்ண ஒளி பெற்று 'கனக துர்கா'' என்ற நாமம் கொண்டு, கனகாசலத்தில் வீற்றிருந்து அனைவருக்கும் அருள் பாலிக்கிறாள்.

அத்யாயம் - 11

# கேனோபநிஷதமும் - ஸஹஸ்ரலிங்கமும்

முன்னொரு சமயம் சிவபெருமான், பார்வதி ஸமேதராக, விலைமதிக்கமுடியாத ஆபரணங்கள் அணிந்து கொண்டும், தங்களது ரிஷப வாஹனத்தில் அமர்ந்து கொண்டும் திருக்காளத்தி செல்வதற்காக கிளம்பினார். வான்வழியாக வரும் போது, வழியில் வைகுண்டம் போன்ற பல லோகங்களை தன் தேவிக்குக் காட்டியும், அவற்றின் சிறப்புக்களையும் எடுத்துரைத்துக் கொண்டிருந்தார். அதிசயிக்கத்தக்க வைரக்கற்களைக் கொண்டுள்ள மேரு மலையினை, நெருங்கும் போது, தேவர்கள் அனைவரும், இங்கும் அங்குமாக ஓடி அலைந்து அவதியுற்றுக் கொண்டிருந்தனர். இதற்குரிய காரணத்தைக் கூறுமாறு பார்வதியானவள் தன் நாதனை வினவ, அவரும், அத்தனை தேவர்களும், தனது கருணை கடாக்ஷத்தை இழந்ததே இந்நிலைக்குக் காரணம். அவர்களது ஆற்றல் குன்றிப் போக, அரக்கர்கள் தலையெடுத்து, அவர்களை ஆட்டுவிக்கின்றனர் என பதிலுரைத்தார்.

தேவர்களின், இந்நிலைக்காக வருந்திய பார்வதி தேவி, அவர்கள் மேல் இரக்கம் கொண்டு, மீண்டும் அவர்கள் மீது கருணை மழை பொழியுமாறு தன் நாதனை வேண்டிக் கொண்டாள். அவரும், அவளது விருப்பத்திற்கு இணங்கி, தன் கருணைக் கண்களால் நோக்க, மீண்டும் அவர்கள், ஆற்றல் பெற்று, அரக்கர்களை போரில் எளிதில் வென்று அழித்தனர்.

தம் வெற்றிவாகையை கொண்டாடிய அவர்கள், தத்தம் தற்பெருமைகளில் மூழ்கலானார்கள். ப்ரம்மதேவர் தன் ப்ரம்மாஸ்த்ரத்தின் துணையாலேயே அரக்கர் ஸேனையை விரட்ட முடிந்தது எனவும், திருமால் தனது ஸுதர்சன சக்ரத்தாலேயே என்றும், வருணன் தன் வருணாஸ்த்ரத்தாலேயே என்றும், வாயு வாயுவாஸ்த்ரத்தாலேயே எனவும், அக்னி ஆக்னேயாஸ்த்ரத்தாலேயே அஸுரப்பட்டாளத்தை ஒழிக்க முடிந்தது என்றும், தத்தம் பெருமைகளை, தாங்களே புகழ்ந்து கொண்டிருந்தனர். இவ்வாறு அகம்பாவத்தினால் பொறாமை ஏற்பட்டு, கலகம் ஆரம்பித்தது.

இப்பூசலினைக் கண்டு அவர்கள் மீது பரிவு கொண்ட சிவபெருமான் 'இந்த வெற்றி உங்களது அஸ்த்ரங்களினால் ஏற்பட்டவை அல்ல என்பதை அறிந்து கொள்ளுங்கள். உங்களது அகம்பாவங்களை ஒழித்து, ஞானம் பெற வேண்டும் எனில் திருக்காளத்திக்குச் சென்று, பரமசிவனைக் குறித்து தவம் செய்து ஞானம் பெறுவீர்களாக! ' என அசரீரி வாயிலாக அவர்களுக்கு தெரிவித்தார்.

இதனால் ஆச்சர்யம் அடைந்த தேவர்கள், அசரீரி வாக்குப்படி, திருக்காளத்தியினை அடைந்து ஸ்வர்ணமுகி நதியினில் நீராடி, வாயுலிங்கத்தை வழிபட்டு, அதற்குத் தெற்கே ஐந்து மைல்கள் தொலைவில் ஒரு ஆச்ரமத்தை அமைத்துக் கொண்டு, ஒரு ப்ரம்மாண்டமான லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து, தவத்தில் ஆழ்ந்தனர். கடைசியில் ஒரு நாள் சிவபெருமான் ஓர் யக்ஷன் வடிவுடன் அங்கு தோன்ற, அவர் யார் என்பத அறியாத தேவர்கள், அவரை நிராகரித்து, அறியாமையினால் வெளியேற்ற முயன்றனர். முதலில் அக்னிதேவன் யக்ஷன் முன் சென்று, 'வைக்கோல் பிரியாக' நின்றிருக்கும் யக்ஷனை எரித்து சாம்பலாக்க முற்பட்ட போது தோல்வியுற்று, அவமானம் அடைந்து திரும்பினான். வாயுதேவன் தனது திறமையைக் காட்ட முற்பட்ட போது அவனால் சிறிது கூட வைக்கோல் பிரியை நகர்த்த முடியவில்லை. இவ்வாறே ப்ரம்மதேவனும், திருமாலும், வருணனும், மற்ற தேவர்களும் முயன்ற போது தோல்வி அடைந்து திரும்பினர். கடைசியாக இந்திரன் தன் வஜ்ராயுதத்துடன் அதனை நெருங்கும் போது, மின்னல் போன்ற ஒளி தாக்க, கண்களை மூடித் திறக்கும் முன், அதிசயத்தக்க வகையில் நல்ல, உயர்ந்த ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட உமா ஹைமவதி புன்முறுவலோடு நின்று கொண்டிருந்தாள்.

இந்திரனும், யக்ஷன் எங்கே என வினவ, அவளும், அவர் சிவபெருமானைத் தவிர வேறு யாராக இருக்க முடியும் ? நீங்கள் கொண்ட வெற்றி அனைத்தும் உங்களது சக்தியினால் ஏற்பட்டவையல்ல. நீங்கள் உங்களது இலக்கினை அடைய, உங்களை பின் நின்று ஊக்குவிக்கின்றார். அவரது கருணையாலேயே தான் நாம் அனைவரும் வெளி உலகினை அறிந்து கொள்ளவும், நினைவுபடுத்திக் கொள்ளவும், கற்பனை செய்து கொள்ளவும் முடிகிறது. சிவபெருமானது கருணையாலேயே நீங்கள் வெற்றிவாகை சூடினீர்கள். அனைத்து ஜீவராசிகளுள் இருக்கும் ஆத்மாவாக 'தத்வ' மாக அவர்

சித்தரிக்கப்படுகிறார். ஏன், இயற்கையாக ஏற்படும் மின்னலும், நம்மை அறியாமலேயே நாம் கண் மூடித் திறத்தலும் போன்றவை, அனைத்துலகிற்கும் தந்தையாகி நிற்கும்' அவராலேயே தான் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன என்று கூறினாள். தங்களது தவற்றினை உணர்ந்த தேவர்கள் தங்களை மன்னித்து அருளுமாறு வேண்டிக்கொள்ள, இறைவனும், அவர்களுக்கு காட்சியளித்து, அவர்களது தீவிர பக்தியின் காரணமாக, கர்வமும், அறியாமையும், அவர்களை விட்டு விலகின என்று ஆசீர்வதித்து, மேலும் அவர்களால் உருவாக்கப்பட்ட லிங்கம் ''ஸஹஸ்ரதேவ லிங்கம்'' எனவும், அவர்களால் உபயோகிக்கப்பட்ட தீர்த்தம் ''ஸஹஸ்ரதேவதா தீர்த்தம்'' எனவும் அழைக்கப்படும் என்று அருள் செய்தார். தீர்த்தத்திற்கு அருகிலுள்ள குகை யக்ஷ குகை என அழைக்கப்படுகின்றது.

(இந்த பெரிய சிவ லிங்கத்தில், ஆயிரத்தெட்டு, சிறு, சிறுலிங்கங்கள் செதுக்கப்பட்டு, திருக்காளத்திக்கு தெற்கே ஐந்து மைல்கள் தொலைவில் அடர்ந்த காட்டின் நடுவே காணப்படுகின்றது. இத்தலம் ''வெய்யிலிங்கால கோனா'' என அழைக்கப்படுகின்றது.)

## அத்யாயம் - 12
## லக்ஷ்மி தேவி

தேவர்களும், அஸுரர்களும் ஒன்று சேர்ந்து இறப்பை ஒழிக்கும் அம்ருதத்தைப் பெறுவதற்காக, பாற்கடலைக் கடையத் தொடங்கினர். மந்தரமலை மத்தாக இருக்க, வாசுகி என்னும் பாம்பரசன் கடைவதற்குரிய கயிறாக மாறினான். திருமால், ஆமை உருக் கொண்டு, பாற்கடலினுள் மந்தரமலையை தாங்கிக் கொண்டிருந்தார். முதலில் ஆலகாலம் என்னும் கொடிய நஞ்சு வெளிபட்டது. திகைத்து நின்ற தேவ, அஸுரர்கள், தங்களைக் காக்கும்படி பரமசிவனை வேண்டிக் கொண்டனர். அனைவருக்கும் பெரியோனான இறைவன் அவர்களுக்காக மனமிரங்கி, நஞ்சு அனைத்தையும் ஒன்று சேர்த்து, சிறிய நாவல் பழ அளவில் உருண்டை செய்து தனது கண்டத்தில் - தொண்டையில் இருத்திக் கொண்டார். அது காண்பதற்கு 'நீல வைரக்கல்லை'ப் போல் ஜ்வலித்துக் கொண்டிருந்தது. அவர்கள் மேலும் பாற்கடலினைக் கடையும் போது, 'காமதேனு' என்னும் பசுவும், 'உச்சைச்ரவ' என்னும் பரியும், 'ஐராவதம்' என்னும்

யானையும், கர்பகவ்ருக்ஷமும், சிந்தாமணியும், பிறைச்சந்திரனும், தேவி லக்ஷ்மியும் ஒருவர்பின் ஒருவராக வெளிவந்தனர். கடைசியில், ஒரு தங்கக் கலசத்தில் 'அம்ருதம்' வெளி வந்தது. விஷ்ணு 'மோஹினி' அவதாரம் எடுத்து தேவர்களுக்கு, அம்ருதத்தைப் பங்கிட்டார். இதனால் அஸுரர்கள் ஏமாற்றம் அடைந்தனர்.

தேவி லக்ஷ்மியானவள், திருமாலை திருமணம் புரிந்து கொண்டு அவர்தம் மார்பினை, தன் வாஸஸ்தலமாகக் கொண்டாள். ஏனைய தேவர்கள், 'கோஸூக்தம்' ஜபித்து காமதேனுவை வணங்கி, தங்களைத் தூய்மைபடுத்திக் கொள்ளவும், ப்ரகாசப் படுத்திக் கொள்வதற்காக, அதன் உடலின் பல்வேறு பாகங்களில் இடம் பிடித்தனர். திருமாலுடைய மார்பிலேயே இடம் பிடித்தமைக்காக கர்வமடைந்த லக்ஷ்மி தேவி, காமதேனுவை வழிபடாமலும், அதன் உடலில் இடம் பெறாமலும் இருந்தாள். இதன் காரணமாக அவள் தன் ஒளியை இழந்த நிலையில், திருமாலால் கைவிடப்பட்டாள். அவர் தன் தேவியை நோக்கி, ''கர்வமடைந்த நீ காமதேனுவை வணங்க மறுத்தாய்! நம் திருமணத்திற்கு முன் 'கௌரி தேவி'யை வழிபட மறந்தாய்! உன்னுடைய அலட்சியமும், கர்வமுமே உனது வீழ்ச்சிக்கு காரணமாயின. திருக்காளத்திக்குச் சென்று, ஸ்வர்ணமுகி நதியில் நீராடி, வாயுலிங்கத்தை வழிபடுவாய்! திரு ஞானப்ரஸூனாம்பிகையின் பாதங்களின் கீழ் 'ஸ்ரீ சக்ரத்தை'ப் பரதிஷ்டை செய்து, 'ஸ்ரீ வித்யா' விதானப்படி பூஜை செய்து வழிபடுவாயாக! அவளது கருணையினால் நீ மீண்டும் உன் ஒளியைப் பெருவாய்'' என உரைத்தார். தன் தலைவனது அறிவுரைப்படி லக்ஷ்மி தேவி திருக்காளத்தியை அடைந்து ஸ்வர்ணமுகி நதியினில் நீராடி தன் வழிபாட்டைத் தொடங்கினாள். அம்ருதக் கடலால் சூழப்பட்ட மணித்வீபத்தில் இருக்கும் சிந்தாமணி க்ருஹத்திலுள்ள பரமேஸ்வரியை நினைத்து வணங்கினாள். சிந்தாமணி க்ருஹத்தில் பல்வேறு இடங்களுக்கு அதிபதிகளாக விளங்கும், பல்வேறு தேவதைகளைப் பூஜித்த பின்னர், இறுதியில் ஸ்ரீ சக்ரத்தின் உட்புறத்தின் பிந்து ஸ்தானத்தில் அமர்ந்துள்ள, சிவனோடு கூடிய கௌரியை நினைத்து, பரம பக்தியோடு பூஜை செய்து வணங்கினாள்.

பழங்கள், பூக்கள், கற்பூரம் முதலானவற்றை அதிபக்தியோடு படைத்தாள். இவ்வாறு பல காலம் கழிந்த பின்னர் ''திரு ஞானப்ரஸூனாம்பிகை''யானவள், வைகாசி மாதம்,

பௌர்ணமி கழிந்த ஐந்தாம் நாள், 'ஸ்ரீ சக்ரத்திலி'ருந்து வெளிப்பட்டு தனது பக்தைக்கு காட்சி தந்தாள். ஆனந்தக் கண்ணீரைச் சிந்திய லக்ஷ்மி, கௌரிதேவியைப் புகழ்ந்து பாடித் துதித்தாள். மன மகிழ்ந்த கௌரி தேவியும், லக்ஷ்மி தேவி இழந்த ப்ரகாசத்தையும், சக்தியையும் அளித்தாள். உடனே திருமாலும் அவ்விடத்தில் தோன்றி, தன் தேவியை ஏற்றுக் கொண்டு, வைகுண்டத்தை அடைந்தார்.

## அத்யாயம் - 13

## ஸ்ரீ ராமன்

தண்டகாரண்ய வனத்தில் மாரீசனைக் கொன்று தன் குடிலுக்குத் திரும்பிய ராமன் அங்கே ஸீதையைக் காணாது மிகவும் துயருற்றான். கண்ணீருடன் ஸீதையை தேடிச் சென்ற ராமன் ஜடாயுவிடமிருந்து ஸீதையை ராவணன் கவர்ந்து சென்றதை அறிந்தான். பிறகு முனிவர் அகத்தியரை ராமன் சந்தித்தான். அவரிடம் தன் துயரத்தைக் கூறினான். அதைக் கேட்ட அகத்திய முனிவர் ''ஓ! ராமா! வஸிஷ்ட முனிவரிடம் வேதங்களையும் சாஸ்த்ரங்களையும் கற்ற நீ ஒரு ஸாதாரண மனிதனைப் போல் கண்ணீர் விடலாமா ? ஒவ்வொரு ஜீவனும் பரமாத்மாவின் ப்ரதிபலிப்பே. ஆதலால் எவருக்கும் பகைவனும் இல்லை. நண்பனும் இல்லை. ஆத்மா அழிவற்றது. எனவே கொல்பவன் என்றும், கொல்லப்படுபவன் என்றும் எவரும் இல்லை. இவை அனைத்தும் அறிந்தும் நீ தேஹாபிமானம் உடையவனாய் இருக்கிறாய். எனவே இத்துன்பத்தை விடுத்து யோக மார்கத்தில் செல்வாயாக'' என்று கூறினார்.

''தவச்ரேஷ்டரே! துயரத்தினால் கொதிப்படைந்துள்ள என் மனத்தினால் இவைகளை சிந்தித்துப் பார்க்க இயலவில்லை. நான் ஒரு க்ஷத்ரியன். எனவே ராவணனைக் கொன்று , ஸீதையை மீட்டு என் குலதர்மத்தை நிலை நாட்ட விரும்புகிறேன்'' என பதிலுரைத்த ராமனின் நிலை கண்டு மனமிரங்கிய அகத்திய முனிவர் 'ராவணன் ப்ரம்மாவிடம் பல வரங்களைப் பெற்றவன். சிவபெருமானிடம் ஆழ்ந்த பக்தியுடையவன். அவனுடைய தீய செயல்களினால் அவன் பெற்ற சக்திகள் குறைந்து வருகின்றன. ஆனாலும் சிவபெருமான் அருளில்லாமல் அவனை வெல்வது கடினம். எனவே (1) திருநீறு

அணிதல் (2) ருத்ராக்ஷமாலை அணிதல் (3) சிவதீக்ஷை பெறுதல் (4) சிவ லிங்கத்தைப் பூஜித்தல் (5)சிவ பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்தல் (6) சிவ ஸஹஸ்ரநாமத்தை பாராயணம் செய்தல் (7) சிவ பக்தி கொண்டிருத்தல் ஆகிய இவற்றைப் பின்பற்றி சிவபெருமானின் அருளைப் பெருவாயாக'' என்று கூறினார். பின்பு அகத்திய முனிவர் சிவதீக்ஷை அளித்தார். மேலும் 'ஆதித்ய ஹ்ருதயம்' என்ற மந்திரத்தையும் உபதேசித்தார். அகத்திய முனிவரின் உபதேசத்தின்படி சக்திகளைப் பெற்று வானர சேனை உதவியுடன் ராவணனை அழித்து அயோத்தி நகரம் திரும்பி, வெகுகாலம் ராஜ்ய பரிபாலனம் செய்தார்.

இதற்குப் பிறகு மேலும் ஒரு துக்கம் வந்தது. அது என்னவென்றால், யாரோ ஒரு வண்ணான் தவறுதலாக சொன்ன சொல்லைக் கேட்டு கர்பவதியான ஸீதையை புறக்கணித்துக் காட்டுக்கு அனுப்பினார். அதனால் ஸ்ரீ வால்மீகி முனிவர் ஸீதையை தன் ஆச்ரமத்தில் வைத்துக் காப்பாற்றினார். பிறகு ஸீதைக்கு பிறந்த இரு குமாரர்களான ''லவ குச''ர்களை பல வித்தைகளில் தேர்ந்தவர்களாகவும், மேலும் ஸ்ரீ ராமனுடைய கதைகளை முழுவதும் இன்னிசையோடு பாடும்படி செய்தார். சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீராமன் அஸ்வமேத யாகம் செய்த சமயம் இரு குமாரர்களையும் ராமன் முன்பு ராம கதையை பாடும்படி செய்தார். ஸ்ரீ ராமன் கேட்டுக் கொண்டதின் பேரில் வால்மீகி முனிவர் ஸீதையை அங்கு அழைத்து வந்தார். ஸீதை துக்கம் தாள முடியாமல் தன்னுடைய தாயான பூமிக்குள் இறங்கிவிட்டாள்.

தன் குமாரர்களினால் பாடப்பட்ட ராமாயணம் ராமருடைய காதில் ஒலித்துக் கொண்டிருந்தது. அதே சமயம் தன் அன்புக்கு மிகப் பாத்ரமான ஸீதையானவள் பூமிக்குள் மறைந்து கொண்டிருந்தது அவர் கண்களுக்கு மிக வேதனை அளித்தது. ராமனுக்கு தன் வாழ்கையில் நடந்த ஒவ்வொரு நிகழ்ச்சியும் பலனற்றதாகவும், வெறுப்பாகவும் ஆயிற்று. இருந்தாலும் திடீரென அகத்திய முனிவரின் அறிவுரைகள் அவர் மனதில் எழுந்தது. உடனே சிவபெருமானை ஏழு விதத்தில் துதிக்கலானார். உடனே பரமேஸ்வரனும் அவர் முன் தோன்றி அன்புடன் சொன்னார், ''அன்புள்ள ராமா! ஏன் இந்த வருத்தம் ? இன்னும் உன்னைச் சுற்றியுள்ள உலகம் மாயை என்று அறியவில்லையா? அதன் மேல் நீ இன்னும் பற்றிக் கொண்டிருக்கிறாய்? உன்னுடைய ஞான ஒளி

வெளிப்பட்டு, உன் மனம் அமைதி பெறட்டும். நீ தக்ஷிண கைலாயம் சென்று வித்யா சைலத்தில் உள்ள என் மகன் கார்த்திகேயனிடம் வழிமுறைகளை தெரிந்து கொள்ளவும். அங்கு நதியில் ஸ்னானம் செய்து பில்வ தளங்களினால் வாயுலிங்கத்தை பூஜை செய்யவும். அது உன் மனதிற்கு அமைதியைத் தரும்'' என்றுரைத்தார்.

அதே போல் ஸ்ரீ ராமன் குருகுஹனான கார்த்திகேயனை அடைந்து அவரிடம் பரதத்வ விஷயங்களைக் கேட்டார். குஹப்பெருமானும் 'ராமா' என்று அன்புடன் கூப்பிட்டு ''பரமாத்மா என்பது பிறவியில்லாதது. எங்கும் நிறைந்தது. ஒரு நிமிட காலமும் அது இல்லாத இடமில்லை. அந்த பரப்ரம்மம் சிறியதற்குள் சிறியதாகவும், பெரியதற்குள் பெரியதாகவும் உள்ளது. அந்த பரப்ரம்மம் 'ஸத், சித், ஆனந்தம்' அனது. ப்ரம்மம் என்பதே உண்மை. மற்றபடி நாம் காணும் உலகமெல்லாம் மாயை. நித்யமும் இல்லாதது.''

''பரப்ரம்மம் தானே இவ்வுலகத்தை ஐந்து மஹா பூதங்களிலிருந்து படைத்து அதற்குள்ளும் ஊடுருவிற்று. உலகத்தில் உள்ள காணும் பொருள்களில் எல்லாம் உள்ள அகங்காரமே ஜீவாத்மா என்பது. (ஜீவாத்மா அகங்காரம் என்ற மாயையால் உலகத்தில் உள்ள பொருள்களெல்லாம் தான் என்று நினைத்துக் கொள்கிறது.) பலதரப்பட்ட உபாதைகளினால் உலகத்தில் உள்ள பொருள்கள் மாயையால் வித்யாசமாகத் தெரிகிறது. இந்த மாயை இரண்டு வகைப்படும். (1) இருக்கும் பொருள் இல்லாததாகத் தெரியும். அதற்கு 'ஆவரண சக்தி' அல்லது அறியாமை எனப்படும். இது பரம்பொருளை அறிவதை மறைக்கிறது. (2) இல்லாதது இருப்பது போல் தோன்றுகின்றது. இதற்கு 'விக்ஷேப சக்தி' என்று பொருள். இதன் தன்மை ஸத்வ, ரஜோ, தமோ குணங்களையுடையது. இந்த மூன்று குணங்களின் தன்மையால் 24 தத்வங்கள் உண்டாயிற்று''.

பிறகு குருவான குஹன் கீழே குறிப்பிட்ட விஷயங்களை நன்கு விளக்கினார். அவைகள், காரணம், ஸூக்ஷ்மம், ஸ்தூல தேஹங்கள். ஆழ்ந்த உறக்கத்தில் உள்ளதும், ஸ்வப்னத்திலும், விழித்திருந்த நிலையிலும் பரமாத்மாவானவர் அந்தராத்மாவில் ப்ரதிபலித்தது. ஆகையால் பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒன்றே. இந்த மஹாவாக்யம் தத், த்வம், அஸி (அது நீ என்று அறிவாய்). ஆகையால் மாயையைத் துறந்து ப்ரம்மத்தில் லயிக்க வேண்டும். அப்போது உலக

மாயையிலிருந்து விடுபடுவாய்.

இவ்வாறு ஞானத்தினால் தெளிந்த ராமன் குருவிற்கு வணக்கம் செலுத்திவிட்டு அவருடைய தூண்டுதலின் பேரில் ஸ்ரீ காளஹஸ்தி அருகில் உள்ள வால்மீகி க்ஷேத்ரத்தில் கோதண்ட ராமேஸ்வரர் என்ற லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து பூஜை செய்து முழு மன அமைதியுடன் அயோத்திக்கு திரும்பினார்.

அத்யாயம் - 14

## தேவேந்திரனது மறுவாழ்வு

ஸ்வர்கத்தில் இந்திரனது ஸபையில், அனைத்து தேவர்களும் தத்தம் ஆஸனத்தில் அமர்ந்து கொண்டு ஆனந்தமாக ரம்பையின் நடனத்தைக் கண்டு களித்துக் கொண்டிருந்தனர். அங்கு ஒலிக்கப்பட்ட ஸங்கீதமானது அனைவரையும் கவரக்கூடிய வண்ணம் மிகச் சிறப்பாக நடந்தது. பார்வையாளர் அனைவரும் தம்மை மறந்த நிலையில் இருந்தனர். தேவேந்திரனது கண்களும், காதுகளும், இங்கும் அங்கும் அசையாமல், கவனம் சிதறாமல், நாட்யத்திலேயே நிலைத்து இருந்தன. தேவ குரு ப்ருஹஸ்பதி ஸபையினில் நுழைந்தது கூட அறியாமல் நாட்ய மயக்கத்தினில் முழுகி இருந்தான் இந்திரன். இதனை பெரும் அவமானமாகக் கருதிய தேவகுரு, அரசாட்சியை இழக்கும்படி சபித்தார். நடனம் முடிந்த பின்னர், தன்னிலை அடைந்த தேவாதிபதி தேவகுருவின் வருகையினையும், அவர் அளித்த சாபத்தினையும் அறிந்து, வருந்தி, அவரிடம் மன்னிப்பு பெறுவதற்காக அவரைத் தேடிச் சென்றான். என்ன துரத்ருஷ்டம்! தேவர்கள் யாரும் அறிய முடியாத இடத்தில் அவர் மறைந்திருந்தார்.

தேவலோக ஆட்சியை இழந்த இந்திரனது அவையை அரக்கர்கள் அலங்கரித்தனர். வேதனையில் ஆழ்ந்த இந்திரன் ப்ரம்மதேவரை சரணடைந்து அவர்தம் அறிவுரைபடி மூன்று தலை கொண்ட த்ரிசிரஸ் என்னும் விச்வரூபனின் உதவியோடு மீண்டும் ஸ்வர்கத்தை கைப்பற்றினான்.

வெற்றிவாகை சூடியும் த்ருப்தியடையாத இந்திரன்

அரக்கர்களை பூண்டோடு ஒழிக்க விரும்பினான். அதற்கான ஒரு யாகத்தை தொடங்கும்படி, புதிய தேவகுருவான த்ரிசிரஸுக்கு பணித்தான். யாகம் தொடங்கியதை அறிந்த அரக்கர்கள் படையெடுத்து வந்தனர். த்ரிசிரஸ் தன் தந்தை த்வஷ்டா வின் அறிவுரைப்படி பாதி ஹவிர்பாகத்தை அரக்கர்களுக்கு அளித்தார். இதனையறிந்து வெகுண்ட இந்திரன், த்ரிசிரஸின் தலைகளை தன் வஜ்ராயுதத்தால் துண்டித்தான். இதனால் ஏற்பட்ட பாபத்தால் சூழப்பட்ட இந்திரன், ஒளி இழந்து, ப்ரம்மஹத்தி தோஷத்தை அடைந்தான். ஆட்சியை மீண்டும் இழந்தான். மறுபடியும் ப்ரம்மதேவனின் உதவியை நாடிய போது அவர் 'சிவ வழிபாடு அனைத்து துன்பங்களையும் போக்க வல்லது. தக்ஷிண கைலாயத்திற்குச் சென்று ஸ்வர்ணமுகி நதியில் நீராடி, வாயுலிங்கத்தை தொழுது நீ மேன்மை அடைவாயாக! என அருள் செய்தார்'.

அதன்படியே இந்திரனும் தன் கர்வத்தை விட்டொழித்து, நிர்மலமான எண்ணங்களுடன், பக்தி ச்ரத்தையுடன் சிவ பூஜை செய்து வந்தான். ஒரு லிங்கத்தை தன் வழிபாட்டிற்காக ப்ரதிஷ்டை செய்து, ஒரு தீர்த்தத்தையும் ஏற்படுத்தினான். பல்லாயிரக் கணக்கான பில்வ இலைகளை கொண்டு பூஜிக்கும் இந்திரனுக்கு எம்பெருமான், பார்வதி, கணபதி, கார்த்திகேயன் ஸமேதராக காட்சியளித்து வேண்டும் வரங்களை பெறுமாறு கூறினார். மகிழ்ச்சியின் எல்லையறியாத இந்திரன், தேவகுருவை தர்சனம் செய்யும் பாக்யத்தை நல்கும்படி வேண்டினான். உடனே அவ்விடத்தில், தேவகுரு தோன்றி, தன் சீடனை மன்னித்து, மீண்டும் தான் தேவகுரு ஸ்தானத்தை தொடரப் போவதாயும் அறிவித்தார். இந்திரனால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட 'வித்யேஸ்வர லிங்கமும்' அவனால் உருவாக்கப்பட்ட 'வஜ்ர தீர்த்தமும்' இன்றும் மக்களுக்கு வேண்டும் வரங்களையளித்து அவர்களுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்கின்றது.

இந்திரன் மீண்டும் தனது அரசாட்சியைப் பெற்று மேன்மையடைந்தான்.

(இந்த வித்யேஸ்வர லிங்கமும், வஜ்ர தீர்த்தமும், திருக்காளத்திக்கு கிழக்கு திசையில் மூன்று மைல் தொலைவில் 'பனசகோனா' என்னும் மலைச்சரிவில் காணப்படுகின்றது.)

## அத்யாயம் - 15
# சந்திரன்

ப்ரம்மதேவர் ஒருமுறை படைக்கும் தொழிலை தக்ஷ ப்ரஜாபதியிடம் ஒப்படைத்தார். அவரும் கணக்கற்ற பல புத்ரர்களைப் படைத்து, அவர்களை உலக வாழ்க்கையில் ஈடுபடுத்த விரும்பினார். இதற்குள் நாரதர் அவர்களை அணுகி, துறவறத்தின் மேன்மையை அவர்களுக்கு போதித்து, முக்தியடையும் வழிகாட்டினார். கோபம் கொண்ட தக்ஷன், நாரதரை வீடு வாசலற்று, குடும்பம், குழந்தை என்ற ஒன்றும் இன்றி அலைந்து திரியுமாறு சபித்தார். நாரதரும் அதைப் பெரிய ஆசீர்வாதமாகவே ஏற்றுக் கொண்டார்.

இதன் பின்னர் தக்ஷப்ரஜாபதி மேலும் பல புத்ரர்களையும், புதல்விகளையும் படைத்தார். அவர்களுள் இருபத்தேழு கன்னிகைகளை சந்திரனுக்கு கன்னிகாதானம் செய்து கொடுத்து, மற்ற கன்னியர்களை மற்ற தேவர்களுக்குத் திருமணம் செய்து கொடுத்தார்.

சந்திரன் தன் மனைவிமார்களுள் ரோகிணியை மட்டும் அதிகமாக நேசித்து, அவளது ஸஹோதரிகளை அலக்ஷ்யப்படுத்தினான். இதனால் மனம் நொந்த அவர்கள், தம் தந்தையிடம் முறையிட்டு அவருடனே தங்கினர். சிறிது காலத்திற்குப் பின்னர், சந்திரன் மனம் வருந்தி, மற்ற மனைவிமார்களை தன் மாமன் இல்லத்தினின்று அழைத்து வந்து, மீண்டும் அவர்களை கைதிகள் போல் நடத்தத் தொடங்க, கோபம் கொண்ட தக்ஷன், தொழுநோயால் அவதியுறும்படி, சந்திரனைச் சபித்தான்.

தன் பாபங்களின் சுமையை, சுமக்க முடியாத சந்திரன் தண்டகாரண்யம் சென்று, அங்கு அகத்திய மாமுனியை சரண்புகுந்து, தனக்கு நல்வழி காட்டுமாறு இறைஞ்சினான். சிவபெருமானின் அன்புக்கு பாத்ரமான அகத்தியமுனி, தக்ஷிண கைலாயத்தை அடைந்து, ஸ்வர்ணமுகி நதியில் நீராடி, வாயுலிங்கத்தை வழிபட்டு, பாப விமோசனம் அடையுமாறு உபதேசித்தார்.

சந்திரனும் முனிவரை வணங்கி, விடைபெற்றுக் கொண்டு, வாயுலிங்கத்தின் தென்மேற்கிலுள்ள 'ப்ரபாஸ தீர்த்தத்தை' அடைந்து, எம்பெருமானை வழிபடலானான். சித்ரை மாதத்தில் பௌர்ணமி கடந்த மூன்றாம் நாள் திருக்காளத்தீஸ்வரன், சந்திரனுக்கு காட்சியளித்து, அவன் பாபங்களைப் போக்கினார். சந்திரனும் தனது ஒளியையும், காந்தியையும் மீண்டும் கிடைக்கப் பெற்றான். சந்திரன் பரமேஸ்வரனை வணங்கி ஆராதித்தான்.

## அத்யாயம் - 16

## ஸுதர்சன சக்ரம்

முன்னொருகாலத்தில் மஹாதேவன் 'ஜலந்தரன்' என்னும் அஸுரனை அழிப்பதற்காக, தன் கால் விரல் நுனியிலிருந்து, ''ஸுதர்சன சக்ரத்தை'' உருவாக்கி அதனைத் திருமாலுக்கு அளித்தார். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களைக் குறிக்கும் 'த்ரிசூலத்தை' தம்மிடம் தக்க வைத்துக் கொண்டார். மஹாதேவனும், திருமாலும் அஸுரனுடன் போராடி, வென்று, அவனைப் பூண்டோடு அழித்தனர். அதன் பின்னர் திருமால் ஸுதர்சன சக்ரத்தின் உதவியால் மேலும் பல அஸுரர்களை வதம் செய்தார். வைகுண்டத்தில் அவர் தம் தேவி மஹாலக்ஷ்மியிடமும், அவளது பணிப்பெண்களிடமும், தனது சிறந்த தோள் வலிமையினாலேயே தான் அனைத்து அரக்கர்களையும், எவரின் உதவியுமின்றி அழிக்க முடிந்தது எனத் தன் பெருமைகளைப் பற்றி உயர்வாக கூறிக் கொண்டிருந்தார்.

இவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டு, அருகிலேயே நின்று கொண்டிருந்த ஸுதர்சன சக்ரமானது, 'மகளிரிடம் தற்பெருமையடித்துக் கொள்வது தகாதது. இதில் உண்மை எதுவென்றால், நானே அனைத்து அரக்கர்களையும் அழித்தேன். எம் உதவியின்றி உம்மால் இந்த ஸாதனை படைத்திருக்க முடியாது' என உரைத்து, வைகுண்டத்திலிருந்து வெளியேறி, தன் விருப்பம் போல், இங்கும் அங்கும் திரிந்து கொண்டிருந்தது. இவ்வாறு ஸுதர்சன சக்ரம், நினைவாலும், வாக்கினாலும், செயற்கையாலும் திருமாலுக்கு அபராதம் செய்தது. சக்ரத்தின் தவறான நடத்தையைப் பற்றி திருமால்,

சங்கரனிடம் புகார் செய்தார். அவரை ஸமாதானப்படுத்திய சிவபெருமான், சக்ரம் தன் ஆற்றலை இழக்கும்படி செய்தார். சக்தி இழந்த நிலையில் சக்ரம் நிற்பதற்குக் கூட த்ராணி இல்லாமல் பொலிவிழந்தது. அவமானத்தால் குன்றிப் போய், சங்கரனைச் சரணடைந்து, தலை கர்வத்தால் நேர்ந்த தன் தவற்றை பொறுத்தருளுமாறு இறைஞ்சிக் கொண்டது. அனைத்து உலகங்களுக்கும் தந்தையாகி நிற்கும் பரம்பொருள் அதனை மன்னித்து இழந்த சக்தியை மீண்டும் சக்ரத்திற்கு அளித்தார். ஆயினும், மனதாலும், வாக்கினாலும், செய்கையினாலும் திருமாலுக்கு மூன்று பாபங்களை புரிந்ததால் தக்ஷிண கைலாயத்திற்குச் சென்று தவம் செய்து, செய்த பாபங்களை கழுவும்படி உரைத்தார். அவ்விடத்தில் ஒரு லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து வழிபடுமாறும் அறிவுறுத்தினார்.

சிவபெருமானின் கூற்றுப்படியே ஸுதர்சன சக்ரம், தக்ஷிண கைலாயத்தை அடைந்து வடக்காக பாயும் ஸ்வர்ணமுகி நதியினில் நீராடி, வாயுலிங்கத்தைப் பில்வ இலைகளால் பூஜித்து வழிபட்டது. கனகாசலத்திற்கு கிழக்கில், ஒரு லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து, தவத்தினில் ஆழ்ந்தது. சிறிது காலத்திற்குப் பின்னர், ஈஸ்வரன் லிங்கத்திலிருந்து எழுந்தருளி சக்ரத்திற்கு காட்சியளித்தார். பக்தி பரவசத்தால், பலவிதமாக இறைவனை துதி செய்து, புகழாரம் சூட்டியது. பரமேஸ்வரனும் இழந்த ஒளியினை (சக்தியினை) மீண்டும் அளித்து, சக்ரத்தை திருமாலிடம் ஒப்படைத்தார். இருவரும், இறைவனுக்கு நன்றி கலந்த வணக்கங்களை ஸமர்பித்து, அவரது கருணையை எண்ணி, மகிழ்ந்து, வைகுண்டம் அடைந்தனர். அன்று முதல் ஸுதர்சன சக்ரமானது திருமாலை விட்டு எப்போதும் நீங்காது நல்லோரைக் காப்பதற்காக அவருக்கு உதவியும், தீயோரை அழிக்கவும் உதவி புரிந்து கொண்டிருந்தது.

(ஸுதர்சன சக்ரத்தால் நிர்மாணிக்கப்பட்ட 'சக்ரேஸ்வரர் லிங்கம்' திருக்காளத்தியில் முத்யாலம்மன் கோவில் தெருவில் காணப்படுகிறது.)

## அத்யாயம் - 17

# தக்ஷிணாமூர்த்தி

ஒருமுறை, குருக்ஷேத்ரத்தில், ஸூர்ய க்ரஹண காலத்தில் பல முனிவர்கள் ஒன்று கூடி, ஜீவாத்மா, பரமாத்மாவைக் குறித்து கலந்துரையாடிக் கொண்டிருந்தனர். அப்போது, ஸனந்த முனிவரும், சாண்டில்ய முனிவரும், தத்தம் மாறுபட்ட கருத்துக்களில் உறுதியாக இருந்தனர். மாமுனிவர்களான சுகரும், ஸனத்குமாரரும், பராசரரும், இரு கொள்கைளும், ஒத்துக் கொள்வதாக இருந்தாலும், அவைகளுல் ஏதேனும் ஒன்று தான் சரியானதாக இருக்க முடியும் என்றனர். பின்னர் அவர்கள், ப்ரம்ம தேவரை வாரணாசியில் தர்சித்து, வணங்கி, அத்வைத, த்வைத, தத்வங்களில் சரியானது எதுவென தெளிவாக்குமாறு வேண்டிக் கொண்டனர். ''குறையுள்ள பார்வையை பெற்ற ஒருவனின் கண்களுக்கு, வானில் தவழும் சந்திரன் இரண்டாகத் தெரிவது போல, ஒரே தத்வம் இரண்டாக உணரப்படுகின்றது. சிவபெருமானின் கருணையினாலேயே இந்த உண்மையினை உணரமுடியும். நீங்கள் அனைவரும் தக்ஷிண கைலாயத்திற்குச் சென்று, வாயு லிங்கத்திடம் உங்களை முழுமையாக அர்பணித்து வழிபட்டால் சிறந்த ஞானம் கிடைக்கப் பெறுவீர்கள்'' என்று ப்ரம்மதேவன் அவர்களுக்கு அறிவுரை செய்தார்.

அவ்வாறே முனிவர்களும் திருக்காளத்தியை அடைந்து ஸ்வர்ணமுகி நதியினில் நீராடி பக்தியுடன் பரமேஸ்வரனை குறித்து தவம் செய்தனர். சிறிது காலத்திற்குப் பிறகு அவர் பெரியதொரு ஆலமரத்தின் கீழ் 'தக்ஷிணாமூர்த்தியாக' காட்சியளித்தார். அவரது ஜடாமகுடம் அனைவரையும் கவர்ந்து இழுப்பதாய் இருந்தது. மிகச் சிறந்த அழகினைக் கொண்ட அவாது முகத் தோற்றத்தால் உண்டான காந்தியானது அவ்விடத்தில் ஆழ்ந்த அமைதியையும், ஆனந்தத்தையும் பரவச் செய்யக் கூடியதாய் இருந்தது. அவரது அழகிய முகத்தில் உள்ள பவழ வாய் தன்னில் புன்முறுவல் தவழ்ந்திருந்தது. பாதியாக திறந்திருந்த அவரது கண்கள் மூக்கின் நுனியிலே நிலைத்திருந்தது. ஒரு கையில் கோடரியையும், மற்றொரு கையில் மானைப் பிடித்தவாறும் காணப்பட்டார். கீழ்புறத்தில் உள்ள வலது கை அமைதிச் சூழ்நிலையில் உபதேசிக்கும் சின்முத்ரையுடனும், இடது கை முழங்கால் மீது உள்ளவாறும் காணப்பட்டார். அகலமான மார்பு அவர்

ப்ராணாயாமத்தை பயிற்சி செய்பவர் போல் இருந்தது. இங்ஙனம் வீராஸன நிலையில் அமர்ந்திருந்த அவரது இடது திருப்பாதம் வலது முழங்கால் மீது இடம் பெற்றிருக்க, மரத்தின் தண்டினைப் போல் வளைவின்றி நிமிர்ந்த அவரது வலது கால் மறதி என்னும் 'அபஸ்மார' அரக்கன் மேல் இடம் பெற்றிருந்தது.

வயது முதிர்ந்த நிலையில் உள்ள முனிவர்கள் இளமையான தம் ஆசானை வணங்கி அவர் முன் பக்தியுடன் அமர்ந்திருந்தனர். இந்த யோகத்தின் தலைவன் தமது சீடர்களுக்கு விண்வெளியின் தத்வத்தை மௌன நிலையிலேயே போதிக்க ஆரம்பித்தார். மெல்ல மெல்ல அனைத்து முனிவர்களும் அவரது போதனையை உணரத் தொடங்கினார்கள்.

தக்ஷிணாமூர்த்தியே மிக உயர்ந்த ஆத்மாவாகவும், ஆலமரத்தின் இலைகளும், பழங்களும், வேர்களும், அதில் வசிக்கும் பறவைகளும், அண்ட சராசரங்களாகவும் குறிப்பிடப் படுகிறது. முனிவர்கள் ஆலமரத்தினை கூர்ந்து கவனித்தனர். அப்பெரிய மரமானது உயிருள்ள ஒரு சிறிய விதையிலிருந்து உருவானதாகும். முதலில் அனைவராலும் எளிதில் காணமுடியாதவாறு இருந்தாலும் வளர வளர இடையில் அனைவராலும் எளிதில் காணக்கூடியதாயும், பின்னர் காலத்தால் காணமுடியாதவாறும் இருக்கிறது. ஆகையால், இவ்வுலகில் நாம் காணும் அனைத்துப் பொருள்களும் நிலையற்றவை. மறையக்கூடிய எதனையும் உண்மையென கருத்தில் கொள்ளுதல் கூடாது. மிக உயர்ந்த ஆத்மா என்னும் விதையிலிருந்து இந்த அண்ட சராசரம் அனைத்தும் உருவானது. சிலந்தி எவ்வாறு தனது உடலினின்று சுரக்கும் ஒருவித த்ரவத்தால் வலை பின்னுவது போல் பரமாத்மாவிலிருந்து இந்த அண்ட சராசரம் தோன்றி பின்னர் அதனுள்ளேயே கலந்து ஒன்றாகிறது. களிமண்ணால் செய்த பானைகளும், பாண்டங்களும் வெவ்வேறாக இருந்தாலும், அனைத்தும் களிமண்ணாலேயே உருவாக்கப்படுகின்றன. தற்காலிகமாக அனைத்து ஜீவாத்மாக்களும், வெவ்வேறு பெயர்களும், வடிவங்களும் கொண்டனவாக இருந்தாலும், அவை அனைத்தும், பரமாத்மாவினின்று வேறுபட்டதல்ல.

ஆசானின் உறுதியான தோற்றமானது உண்மையான தத்வத்தை தேடுவோருக்கு வேண்டுவதாய் இருந்தது. மூக்கின்

நுனியிலே நிலைத்திருந்த கண்கள், நான் யார்? கண்கள், காது, மூக்கு அல்லது உடலின் வேறு பாகங்களாகி நிற்பனவா? இந்த உடல் அழிவுற்றதும் என் நிலை என்னவாகும் போன்ற தன்னிலை உணரும் கேள்விகளுக்கு விடையை தேடுவதாக இருந்தது. மூச்சினை அடக்கி தவத்தில் ஈடுபட வேண்டுமானால் யோகத்தை பயிற்சி செய்தாலே முடியும். புலன்களின் மீதுள்ள ஆர்வத்தை அடக்க வேண்டும். அவரது கைகளில் உள்ள கோடாரியும், மானும், ஸத்வ, ரஜஸ், தமஸ் போன்ற குணங்களால் துள்ளியோடும் மனம், கோடாரியால் அறையப்பட்டு ஒழுங்கானதொரு நிலையை அடைய வேண்டும் என்பதை உணர்த்துகிறது. ஜீவனானது தான் நிலையான ஒன்று என எண்ணி தான் புகுந்த உடலோடு உறவு கொண்டுள்ளது. இந்த அறியாமையினால் துன்பங்கள் பல நேருகின்றன. இந்த மறதி என்னும் அரக்கன் சிறிய உருவமுடையதாக்கப்பட்டு வலிமை வாய்ந்த பாதத்தால் நசுக்கப்பட வேண்டும். இதனைக் குறிக்கவே தக்ஷிணாமூர்த்தியின் வலது பாதத்தின் கீழ் அபஸ்மார (மறதி) அரக்கன் விழுந்திருக்கிறான். தன்னிலை உணர, அடைய, ஒருவன் உண்மை எது, பொய் எது, என ஆராயக் கூடிய மெய்யறிவு பெற்றிருத்தல் வேண்டும்.

கடைசியாக, முனிவர்கள் அவரது சின்முத்ரையில் கவனம் செலுத்தினர். இம்முத்ரையில், கட்டை விரல் மிக உயர்ந்த பரமாத்மாவையும், ஆள்காட்டி விரல் ஜீவாத்மாவையும் குறிக்கும். ஆள்காட்டி விரலானது, அதாவது ஜீவாத்மாவானது மற்ற மூன்று விரல்களான ஸத்வ, ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்களுடன் தொடர்பு கொண்டுள்ள வரையில் பந்தத்திலேயே கட்டுப்பட்டு இருக்கின்றது. இம்மூன்று குணங்களினால் ஆளப்பட்டிருக்கும் வரையில் பிறப்பு, இறப்பிலிருந்து விடுதலை இல்லை.

உண்மை தெரியாதவரையில் கயிறு கூட பாம்பாக காணப்படுகின்றது. அறியாமையினால் ஏற்படும் இந்த இருள், ஞானம் என்னும் தீபத்தால் அழிக்கப்படுகின்றது. இஞ்ஞானத்தின் காரணமாகவே, ஜீவாத்மா, தான் பரமாத்மாவினின்று வேறுபட்டதல்ல என்று தன்னை அடையாளம் கண்டு கொள்கின்றது. 'அஹம்' என்ற ஆள்காட்டி விரலானது வளைந்து கட்டை விரலுடன் சேரும் போது பரமாத்மாவினுள் கலக்கும் நிலை உண்டாகின்றது. அது பரமாத்மாவுடன் சேரும் போது முக்தி எனும் நிலையை அடைகிறது.

இவ்வாறு முனிவர்கள், சிறந்த ஞானத்தை, உண்மையினை அனுபவித்தனர். ஞானம், (ஸத்) மெய், பொய் இவற்றை ஆராயக் கூடிய அறிவு(சித்), மகிழ்ச்சியின் உன்னத நிலை (ஆனந்தம்) இவற்றை அனுபவித்தனர். அவர்களுலிருந்து எழுந்த ஞான ஒளியானது, ''ஸர்வம் சிவமயம்'' என்பதனை அவர்களுக்கு உணர்த்தியது.

இவ்வாறு மௌன நிலையிலேயே 'ப்ரம்ம வித்தையானது' தக்ஷிணாமூர்த்தியால், முனிவர்களுக்கு போதிக்கப்பட்டு அவர்களது ஸந்தேஹங்களுக்கும், வினாக்களுக்கும் உரிய விடை கிடைக்கப்பெற்று அவர்கள் தெளிவடைந்தனர். மூன்று முனிவர்களும் அனைத்து உலகங்களுக்கும் சிறந்த ஆசானுக்கு, தங்கள் ஸாஷ்டாங்க நமஸ்காரங்களை ஸமர்பித்து புகழாரம் சூடினர். ஞானம் பெற்ற மூவரும் தனித்தனியாக வேறு வேறு லிங்கங்களை ப்ரதிஷ்டை செய்து, வழிபட்டு, அத்வைத தத்வத்தை இவ்வுலகில் பரப்புவதற்காக ஆனந்தமாகச் சென்றனர்.

(திருக்காளத்தி கோவிலில், தக்ஷிணாமூர்த்தியினது சிலை ப்ரதான இடத்தை பெற்றுள்ளது.)

## அத்யாயம் - 18
## அர்தநாரீஸ்வரர்

திருக்காளத்தீஸ்வர் ஆலயத்தின் வடக்கில் இரண்டு மைல்கள் தொலைவில் விசாலபுரம் என்னும் க்ராமத்தில் இறைவன் அர்தநாரீஸ்வரராக காட்சியளிக்கிறார். இதற்கு நம் புராணத்தில் பாப விச்சேத க்ஷேத்ரம் என்னும் பெயரும் உண்டு. வடபுறமாக பாயும் ஸ்வர்ணமுகி நதிக் கரையில் இத்தலம் விளங்குகிறது. ஸ்வயம்புவான இந்த லிங்கத்தில் சிவனின் பாகம் வெண்மையாக மேற்கு நோக்கியும், சக்தியின் பாகம் மஞ்சள் வண்ணத்தில் வடகிழக்கினையும் நோக்கியிருக்கிறது. க்ருதயுகத்தில் தேவர்களால்பூஜிக்கப்பட்ட இந்த லிங்கம் ஸத்யலிங்கம் என்ற நாமம் கொண்டதாக விளங்கியது. த்வாபரயுகத்தில் நல்ல ஒழுக்கமுடைய அவந்தி நகரத்தைச் சார்ந்த விஜயன், ஸுபகா என்னும் தம்பதிகளால் பூஜிக்கப்பட்டதால்

ஸுபகாம்பா ஸமேத ஸ்ரீ விஜயேஸ்வர ஸ்வாமி என்ற நாமம் உடையவராக விளங்குகிறார்.

இந்த புண்ய தம்பதிகளின் வரலாறு புனிதமானது. ஈடு இணையற்றது. அவந்தி நகரத்தில், விஜயன், ஸுபகா என்னும் அழகும், இளமையும் கொண்ட தம்பதிகள் வாழ்ந்து வந்தனர். குழந்தை பருவத்திலிருந்தே சிவபூஜையில் மனம் லயித்தவனான விஜயன், வளர, வளர தன் புலன்களை அடக்கும் ஆற்றல் பெற்றவனானான். ஆயினும், தன்னை முழுதுமாக உணர விரும்பி மாமுனிவரான மார்கண்டேயரை அணுகி தனக்கு நல்வழி காட்டுமாறு மன்றாடினான். தன்னை உணர்ந்த மாமுனிகள் தக்ஷிண கைலாயத்தை அடைந்து அங்கு அருள்பாலிக்கும் திருக்காளத்தீஸ்வரரை வணங்கி முக்தி பெறுமாறு அனுக்ரஹித்தார்.

அவர்தம் சொற்படி, தம்பதிகள் இருவரும் திருக்காளத்தியை அடைந்து, ஒரு சிறு குடிலில் வாழத்தொடங்கினர். சைவ ஒழுக்கத்தை கைப்பிடித்து, உயிர்வாழ்வதற்காக நிதமும் சிறு உணவையே ஆஹாரமாகக் கொண்டு ஆலயத்தை அடைந்து சிவபூஜையில் ஈடுபடுவான் விஜயன். இவ்வாறாக பல நாட்கள் கடந்தன.

ஒரு நாள் மாலை, விஜயன் தன் குடிலை அடைந்த போது, அவனது மனைவி, நற்சுவையான உணவையும், இனிப்புக்களையும், பழங்களையும் பறிமாறினாள். அவன் சற்று ஓய்வெடுத்துக் கொள்ளும் போது, ஸுபகா தன் நகைகளினால் தன்னை நன்கு அலங்கரித்துக் கொண்டு, பிறந்த மேனியளாய் தன் கணவனை நெருங்கி மிக மிக அருகில் அமர்ந்து கொண்டு தன்னுடன் உறவாடும்படி வேண்டினாள். உயிருள்ளவையாக இருந்தாலும், ஜடப் பொருளாக இருந்தாலும், எதிலும் சிவத்தையே காணும், உணரும் விஜயனுக்கு மனைவியினது இரண்டு ஸ்தனங்களும் பொன்னாலான லிங்கங்களாகவே காட்சியளித்தன. மனதினில் பக்தி வெள்ளம் பெருக்கோட, அவன் அந்த இரட்டை லிங்கங்களுக்கு மலர்கள், வாசனை த்ரவ்யங்கள், பழங்கள் முதலானவை படைக்கலானான். பின்னர், ஏதோ நினைவு கூர்ந்தவனாக கோவிலுக்குப் புறப்படத் தொடங்கினான். செல்லும் வழியில் நடந்தவைகளை நினைவு கூர்ந்த பொழுது அனைத்தும் மனைவியினது இளமையினால் ஏற்பட்ட

ஸங்கடமே என உணர்ந்து, ஆன்மீகத்தில் முன்னேற்றம் அடைய வேண்டுமெனில், இல்லற வாழ்வை துறப்பது என முடிவு செய்து எம்பெருமான் வழிகாட்டியபடி வடபுறம் கோவில் கொண்டுள்ள, தேவர்களாலும், முனிவர்களாலும் பூஜிக்கப்பட்ட அர்த்தநாரீஸ்வரர் திருக்கோவிலை அடைந்தான்.

தன் தலைவனது செய்கையை அறிந்த ஸுபகா மிக்க மன வருத்தம் கொண்டவளானாள். ஆன்மீக ஞானம் பெற்ற தன் பதியை தன் அழகினாலும், இளமையினாலும் தான் கவர முடியாது என்பதை உணர்ந்த அவள் தன் கணவனது பாதையையே பின்பற்ற வேண்டும் என முடிவு செய்தாள். அவள் ஒரு சிவயோகியை சரண் புகுந்து, களிமண்ணால் செய்த நூறு லிங்கங்களை வழிபட்டு, இறைவனின் கருணைக்கு பாத்ரமானாள்.

அவளை சோதிக்கும் பொருட்டு இறைவன், அழகும், இளமையும் கொண்ட அந்தணனாக உருக் கொண்டு, அவளருகே சென்று மயக்கும் மொழிகளால் பேசி , பயனிலாது போகவே, அவளை வற்புறுத்த முற்பட்ட போது, அவள் கண்களை மூடிக் கொண்டு தன்னை காக்கும்படி எல்லாம் வல்ல பரம்பொருளிடம் கதறினாள். கண்களைத் திறந்த போது ஞானாம்பிகை ஸமேதராக பெருமான் காட்சியளிக்கக் கண்டு, வியந்து, மகிழ்ந்து வணங்கினாள். சங்கரனும், அம்மாதை நோக்கி 'நற்குணவதியே! நினது தூய துறவறத்தை சோதிக்கவே யாம் இவ்வாறு செய்தோம். மாதருள் மாணிக்கமான நங்கையே! நீ வேண்டும் வரங்களைக் கேள்! எனக் கேட்க, அவளும் இறைவா! நான் ஸாயுஜ்ய முக்தி அடைய வேண்டும் என வேண்டி வரம் பெற்றாள்.

அனைத்தையும் கேள்வியுற்ற விஜயன் தன் வழிபாட்டை மேலும் தீவிரமாக்கி, அன்ன ஆஹாரமின்றி, சிவபூஜையில் ஈடுபட்டான். உமாபதியும், விஜயன் தன் மீது கொண்டுள்ள பக்தியை உலகம் அறியும் வண்ணம் செய்ய விரும்பி தன் நம்பிக்கைக்கு பாத்ரமான கணாத்யக்ஷ சந்திரஹாஸனை, விஜயனிடம் அனுப்பினார். அவனும் நாராயணனைப் போல வேடம் தரித்து, ஸர்வேஸ்வரனைப் பற்றி தவறாக கூறலானான். விஜயன், தன்னிலை பிறழாது, நாராயண வேடம் தரித்தவரை நோக்கி, ப்ரம்மனாலும், திருமாலாலும் காணமுடியாத முக்கண்ணன் மண்ணுக்கும்,

விண்ணுக்குமாய் காணற்கரிய ஜோதியாய் நின்றவனைப் பற்றி நீர் எங்ஙனம் குறை கூற முடியும் என மனக்கசப்புடன் வாதிக்கலானான். அவனது உறுதி கண்டு மகிழ்ந்த சந்திரஹாஸனும் தன் நிஜ ரூபத்துடன் விஜயனுக்கு காட்சியளித்து நடந்தவைகளை விளக்கினான்.

ச்ராவண மாதத்தில் பௌர்ணமி நன்னாளில் அர்தநாரீஸ்வரரான ஸத்யலிங்கத்திலிருந்து, இறைவன், தன் உமையோடு விஜயனுக்கு காட்சியளித்து அருள் செய்தார். அவனது பக்தியினால் ஈர்க்கப்பட்ட இறைவன் தாம் ஸுபகாம்பா ஸமேத விஜயேஸ்வரராக எப்போதும் இவ்விடத்திலேயே உறைவோம் என திருவாய் மலர்ந்தருளி, அவனை தன் அருள் மழையில் நனையச் செய்தார்.

## அத்யாயம் - 19

# த்ரிபுரஸம்ஹாரம்

முருகனால் ஸம்ஹரிக்கப்பட்ட தாரகாஸுரனுக்கு வித்யுன்மாலி, தாரகாக்ஷ, கமலாக்ஷ என்னும் மூன்று பேரன்மார்கள் இருந்தனர். அவர்கள் ப்ரம்மதேவரை நினைத்து தவம் இயற்றி பல வரங்களைப் பெற்றனர். அவர்கள் வான மண்டலத்தில், தங்கத்தினால் ஆனதும், வெள்ளியினாலானதும், இரும்பினாலானதுமான சுழன்று கொண்டிருக்கும் மூன்று நகரங்களை நிர்மாணித்தனர். மேலும், அந்த நகரங்கள் ஆயிரம் வருடங்களுக்கு ஒருமுறை ஒன்று சேரும் போது நடைமுறையில் இல்லாத புதுமையான வில்லும், அம்பும் கொண்டு, ஒரே எய்தலில் ஒரு வினாடியில் தான் வீழ்த்தப்படலாம்! அவர்களது முடிவு சிறப்பான முறையில் வர வேண்டும்! போன்ற வரங்களைப் ப்ரம்மதேவரிடமிருந்து பெற்றனர். அவர்கள் அனைத்து வசதிகள் பொருந்தின அந்த நகரங்களில் வாழ்ந்து வந்தனர். அங்கு மிகப் பெரிய சிவாலயங்கள் காணப்பட்டன. பண்டிதர்களால் வேத கோஷங்களும், யாகங்களும் நடத்தப்பட்டன. அதிக ஆற்றல் கொண்ட மூன்று அரக்கர்களும், தம் விருப்பம் போல காண்பவற்றை எல்லாம் அழித்து, சேதப்படுத்தி அனைவருக்கும் துன்பங்களை ஏற்படுத்தினர். ஆனால் அவர்கள் பரமசிவனின் பக்தர்கள். ஆகையால் யாராலும் அவர்களை அழிக்க முடியாது என்ற நம்பிக்கை அவர்களுள் அதிகமாகவே இருந்தது.

இவர்களின் கொடுமையை பொறுக்கமுடியாத இந்திராதி தேவர்கள், மஹாவிஷ்ணுவிடம் முறையிட்டனர். அவர்களிடம் பரிவு கொண்ட திருமால், 'ஹரிஹந்த்' என்னும் முனியை ஸ்ருஷ்டி செய்து அவரிடம் வேத சாஸ்த்ரங்கள் அல்லாது, உலக போகங்களை மட்டும் முதன்மையாகக் கொண்டதும், கவர்ச்சிகரமானதுமான ஒரு புதிய தர்மத்தை எழுதுமாறு கேட்டுக் கொண்டார். அதன்படி அவரும் அனைவரின் கவனத்தை திசை திருப்பக்கூடியதும், குழப்பக்கூடியதுமான ஒரு புதிய நெறியை உருவாக்கி திருமாலிடம் ஸமர்பித்தார். அவரும், நாரதரிடம் மூன்று புதிய நகரங்களில் ஏதேனும் கலகத்தை ஏற்படுத்துமாறு கட்டளையிட்டார். நாரதரும் மொட்டை அடித்துக் கொண்டு கையில் மயில் இறகுகளோடு பொன்னாலான நகரத்தில் வசிக்கும் வித்யுன்மாலியின் ஸபையை அடைந்தார். நெற்றியில் நாமம் இல்லாமலும், கைகளில் வீணையில்லாமலும் அவர் காணப்பட்டார். அவரது கோலத்தைக் கண்டு அதிர்ந்த அரக்கன் 'புனிதமான முனிவரே' உமக்கு என்ன நேர்ந்தது ? உம் கோலத்தை கண்டு நான் அதிர்ச்சியடைகிறேன்' என்று கூறினான். அதற்கு நாரதரும் 'ஓ' வல்லமை பொருந்திய அரசனே! என்னவென்று கூறுவேன்! வைகுண்டத்தில் உள்ள ஒரு அதிசயமான முனிவரால் ஏற்படுத்தப்பட்ட புதிய நெறியின் போதனையால் நான் இத்தகைய தோற்றம் கொண்டேன். அவரது வேதாந்தங்கள் உண்மையாகவும், பயன்தரக் கூடியவகையிலும் உள்ளன. இதனால் நான் மகிழ்ச்சியோடு இருக்கின்றேன் என்று பதிலுரைத்தார். அவரது மாயாஜாலம் அரக்கனுள் நன்கு வேலை செய்து, அவன் புதிய முனிவரின் தர்சனத்திற்காக ஏங்கி நிற்கலானான்.

விரைவில் ஹரிஹந்த் முனிவர் தனது நான்கு சீடர்களுடன் பொன்னகரத்தை அடைந்தார். அனைவரும் மொட்டை அடித்துக் கொண்டு, கைகளில் மயில் இறக்கைகளுடன் காணப்பட்டனர். அவர்கள் வீதி வீதியாகத் திரிந்து புதிய கொள்கைகளை பரப்பலானார்கள். அவர்களது போதனையால் கவரப்பட்ட மக்கள் பெரும் அளவில் கூடி புதிய நெறிகளை ஏற்றுக் கொண்டனர். அரக்கர் தலைவனும் மனம் மகிழ்ந்து முனிவரின் சீடரானான்.

'அஹிம்ஸா பரமோ தர்ம:' மக்கள் யாகங்கள் நடத்தி பலி கொடுப்பதால் நல்ல மறுவாழ்வு பெறுவோம் என்ற நம்பிக்கை கொண்டிருக்கின்றனர். ஆடுகளைக் கொல்வதால் மக்கள் தன் பாபங்களைக் கழுவமுடியுமா ? குதிரைகளைக் கொல்வதால் அவர்களது ராஜ்யங்களை பெருக்கிக் கொள்ளமுடியுமா ? அஹிம்ஸையைத் தவிர சிறந்த தர்மம் எதுவும் கிடையாது. 'உண்மையைத்' தவிர எந்த கடவுளும் பெரியவரில்லை. மரணத்திற்குப் பின் என்ன நடக்கின்றது என்பதை யாரும் அறியமுடியவில்லை. எனவே, செல்வத்தை சேர்த்துக் கொண்டு அதை நன்கு அனுபவிக்க வேண்டும். ஸத்யத்திலும், அஹிம்ஸையிலும் நிலைத்திருக்க வேண்டும். 'ஸத்யம் வத, தர்மம் சர' என்று தனது புதிய நெறிகளை விரிவாக எடுத்துரைத்தார். இதனால் த்ருப்தி அடைந்த மன்னனும், மக்களும் ஆலயவழிபாடுகளையும், வேத சாஸ்த்ர நெறிகளையும் மறந்து விடுத்தனர்.

இதனைக் கண்ட தேவர்கள் மனம் மகிழ்ந்தனர். தனது முன்னாளைய பக்தனின் செய்கையைக் கண்ட சிவபெருமான் மனம் வருந்தி, தேவர்களுக்கு உதவ முன் வந்தார். விரைவினில் மூன்று நகரங்களும் ஒன்று சேரப் போவதை பரமேஸ்வரன் உணர்ந்தார். தேவர்களிடம், ப்ரம்மன் அரக்கர்களுக்கு அளித்துள்ள வரங்களைப் பற்றி நினைவுபடுத்தி ஸம்ஹாரத்திற்குத் தேவையான ஸாதனங்களை அளிக்குமாறு கூறினார். அனைத்து உலகங்களும் ஈஸ்வரனுக்கு பின்னே இருந்தன. பூமி தேவி தேராக மாற, சந்திர ஸூர்யர்கள் சக்ரங்களாக ஆயினர். நான்கு மறைகளும் பரிகளாக மாறி, ப்ரம்மதேவர் அவைகளின் ஸாரதியானார். மேருமலை வில்லாக வளைந்து அதில் வாஸுகி என்னும் அரவம் நாணாக ஏற்றப்பட்டது. அனைத்தையும் துளைக்கக் கூடிய அம்பாகத் திருமால் வடிவெடுத்தார். விந்தையான ஆயுதங்களுடன் தனதுதேரினில் மூன்று நகரங்கள் ஒன்று சேரும் நேரத்தை நோக்கி காத்திருந்தார் சிவபெருமான். ருத்ரனாக மாறிய சிவபெருமான், கைகளில் வில், அம்பு முதலானவைகளுடன் அம்பு எய்தலுக்குரிய நிலையில் தயாராக நின்றிருந்தார். அச்சமயம் விஜயலக்ஷ்மி தேவியானவள் தோன்றி, சிவபெருமானது பெருமைகளை புகழ்ந்துரைத்து அவருக்கு வெற்றி நிச்சயம் என்று குறி சொன்னாள். அம்பாக மாறிய தன் உதவியுடன் தானே, ருத்ரனால் த்ரிபுரத்தை தகர்க்க முடியும் ? இவ்வாறிருக்க, புகழுரைகள் அவருக்கு மட்டும் ஏன் ? என நினைத்த திருமால் ஆத்திரப்பட்டார். இதை

உணர்ந்த இறைவன் வில்லையும், அம்பையும் தவிர்த்து தனது மூன்றாவது கண்ணான நெற்றிக் கண்ணைத் திறந்தார். உடனே அக்னிஜ்வாலைகள் மின்னல் போல் மூன்று நகரங்களையும் கைப்பிடியளவு சாம்பலாக மாற்றின. ஆனந்தத்தின் உச்ச நிலையில் ஆண்டவன் தாண்டவமாட உடன் தேவர்களுமாட, சிவகணங்களும் சேர்ந்து ஆடத்தொடங்கி வெற்றிவாகையைக் கொண்டாடினர்.

அவமானத்தால் குன்றிப்போன திருமால் துணையற்ற நிலையில் மூலையில் நின்று கொண்டிருந்தார். தலைமைப் பதவியையும், அனைவராலும் வணங்கப்படும் தகுதியினையும் நீ இழக்கக் கடவாய்! என அவருக்கு, சிவபிரானால் சாபம் அளிக்கப்பட்டது. தன் தவற்றை உணர்ந்து, வருந்தி தனக்கு சாப விமோசனம் அளிக்கும்படி எம்பெருமானிடம் இறைஞ்சினார். அவர்மீது பரிவு கொண்ட சங்கரன், தக்ஷிண கைலாயத்திற்குச் சென்று தவம் செய்யுமாறு அறிவுருத்தினார். அதன்படி அவரும் தக்ஷிண கைலாயத்திலுள்ள 'பூகர்ண' என்னுமிடத்தில் இறைவனை மனதார நினைத்து, வணங்கி தவத்தில் ஆழ்ந்தார். சிறிது காலத்திற்குப் பிறகு சிவபெருமான் திருமால் முன் தோன்றி, தலைமைப் பதவியான 'ஸபாபதி' என்னும் பட்டத்தை அளித்தார். மேலும், அனைவரையும் காக்கும் ஆற்றலையும் அவருக்களித்து அருள் செய்தார். தேவர்கள், திருமாலை புகழ்ந்து பாடியும், பரமேஸ்வரனின் விசேஷ குணங்களை புகழ்ந்துரைத்தும் வணங்கினர்.

(பூகர்ண க்ஷேத்ரம் என்னும் 'பொக்கசம்பாளையம்' திருக்காளத்திற்குத் தென்மேற்கில் நான்கு மைல் தொலைவில் உள்ளது.)

அத்யாயம் - 20

## நடராஜனின் ஆனந்ததாண்டவம்

முன்னொரு காலத்தில் 'ஸ்ரீ நகர் என்னும் நகரில் ஸோமகா என்னும் அந்தணன் வேத சாஸ்த்ரங்களை கற்றறிந்தவனாயும், சிவ வழிபாட்டினில் விருப்பம் கொண்டவனாயும் வாழ்ந்து வந்தான். அவனது மைந்தனான 'நீலகண்டன்' வேதங்களை அறிந்த சான்றோனாக இருந்தான். அவன் தீர்த்த யாத்ரை செல்வதற்காக தன் தந்தையிடம்

அனுமதி பெற்று பல புனித தலங்களுக்குச் செல்லலானான். வாரணாசியை அடைந்த போது அங்கு பல முனிவர்கள் ஒன்று கூடி நாரத முனிவரின் உபதேசங்களை கேட்டுக் கொண்டிருக்கையில் நீலகண்டனும் கேட்க நேர்ந்தது. பல ஸ்தலங்களின் புனிதத்தையும், பெருமைகளையும் புகழ்ந்துரைத்துக் கொண்டிருந்த தேவரிஷியான நாரதர் திருக்காளத்தியின் பெருமைகளைப் பற்றியும் குறிப்பிட்டார்.

தமிழகத்தில் உள்ள சிதம்பரம் என்னும் ஊரில் ஆனந்ததாண்டவம் புரிந்த நடராஜப் பெருமானின் நடனத்தைக் கண்டு களித்த முனிவர்கள் பலர் மோக்ஷத்தை அடைந்தனர் என்பதையும், நாரத முனியின் வாயிலாக அறிந்து கொண்டான். தக்ஷிண கைலையிலுள்ள திருக்காளத்தி தலத்திலேயே இறைவனது நடனத்தை கண்டு களிக்க விழைந்த அவன் குதூஹலமாக திருக்காளத்தியை அடைந்தான். வாயுலிங்கத்தின் மேற்கினிலுள்ள வீரக்ஷேத்ரத்தை தான் தவம் செய்ய உகந்த இடம் எனத் தேர்ந்தெடுத்தான். அவ்விடத்திலேயே ஒரு லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து, ஒரு தீர்த்தத்தையும் தனது தினசரி வழிபாட்டிற்காகவும், தேவைக்காகவும் ஏற்படுத்தினான். நடராஜனின் நடனத்தைக் காண விரும்பி தீவிர தவத்தில் ஆழ்ந்தான். ஐந்து வருடங்கள் இங்ஙனம் கழிந்த பின்னர், சிவபெருமான், அவனது விருப்பத்தை பூர்த்தி செய்ய எண்ணம் கொண்டார். தெய்வ கட்டிடக் கலையில் வல்லுனரான விஸ்வகர்மாவை தக்ஷிண கைலாய மலையில் ஒரு பொருத்தமான நடன அரங்கத்தை நிர்மாணிக்கும்படி பணித்தார். அதன்படி அவரும் ஒரு அற்புதமான அரங்கத்தை நிர்மாணித்தார்.

பின்னர் திருக்காளத்தீஸ்வரர், ஞானாம்பிகை, நந்தி, ஹரி, ப்ரம்மா, இந்திரன் உள்ளிட்ட தேவர்கள், மற்றும் பல முனிவர்களுடன் கூடி சித்ரை மாதம் பௌர்ணமி கழிந்த ஐந்தாம் நாள் நீலகண்டனுக்கு காட்சியளித்தார். மெய் சிலிர்த்த அவனும் இறைவனை ஸாஷ்டாங்கமாக வணங்கி பல பாமாலைகளை பரமேஸ்வரனுக்கு ஸமர்பித்தான். 'பாபங்களைப் போக்கி முக்தியினை அளிக்கவல்ல உமது ஆனந்ததாண்டவத்தை நான் கண்டுகளிக்க அருள் புரிய வேண்டும் மஹாதேவரே!' என இறைஞ்சி கேட்டுக்கொள்ள பரமசிவன் ஒப்புதல் அளித்தார்.

குதூஹலமடைந்த தேவர்கள் பக்கவாத்யங்களை

இசைக்கத் தொடங்கினர். ப்ரம்மதேவன் தாளம் தட்ட, நந்தி மத்தளம் கொட்ட, விஷ்ணு ம்ருதங்கம் வாசிக்கலானார். கௌரி தேவி கஹாலிகையை இசைக்க, ஸரஸ்வதி கச்சபி வாசிக்க, இந்திரன் குழலூத, லக்ஷ்மி தேவி பஸ்த்ரிகையை இசைக்க, ஏனைய தேவாதி தேவர்கள், பலவகையான இசைக் கருவிகளை இசைக்கலானார்கள். திருக்காளத்தீஸ்வரரும் நடனத்திற்கேற்றவாறு தம்மை அலங்கரித்துக் கொண்டு திருநீற்றினை தம் நெற்றியின் மீது மூன்று கோடுகளாக பூசிக் கொண்டார். இம்மூன்று கோடுகளும், நம் மனத்தாலும், வாக்கினாலும், செய்கையினாலும் ஸத்யத்தை கடைபிடிக்க வேண்டும் என்பதனை குறிக்கின்றது. நந்தி, பெருமானது ஜடையினை பாம்புகளைக் கொண்டு இறுக்கிக் கட்டி பிறை சந்திரனை சரி செய்தார். தன் தலைவனை அம்பிகையும் அலங்கரித்து, அவரது முழங்கால்களை தொடும் அளவிற்கு நீண்டதொரு மாலையினை கழுத்தினில் சூட்டினாள். அவரும் பெருமித நடையுடன் அனைத்து வசதிகளுடன் கூடிய அந்த அரங்கத்தில், அந்தி சாயும் வேளையில் நுழைந்தார்.

நிகழ்ச்சி தொடங்க இருப்பதை அறிவிக்க நந்தி தேவர் 'நாந்திக்' கொட்டினை வாசித்தார். லக்ஷ்மி, ஸாஸ்வதி, விஜயா மூவரும் இசைக்கேற்றவாறு பாட, நடராஜர் தம் அபினய முத்ரைகளுடன் ஆடத்தொடங்கலானார். அவரது அசைவுகளால் கட்டி முடிந்திருந்த ஜடையானது அவிழ்ந்து, ஜடையிலுள்ள தெய்வீக ஊற்று பெருக்கெடுத்து அந்த அவையினில் தெளிக்கப்பட்டு அவையே தூய்மையுடையதாயிற்று. விரைந்து ஆடிய ஜடாமுடியால் வானத்து நக்ஷத்ரக்கூட்டங்கள் மல்லிகை மலர்களைப் போல் சிதறிக கிடந்தன போல் தோன்றியது. அவரது கைகளின் வேகமான அசைவுகளால் திருநீறு ஒரு புகை மண்டலத்தையே உருவாக்கியது. அப்போது உண்டான புகையால், திருநீறு, முனிவர்கள், தேவர்கள் மார்பினில் பட்டு, அவர்களது பாபங்களைப் போக்கியது. தொண்டையிலிருந்து எழும்பிய பாடலுக்கேற்றவாறு கைகள் அசைந்தாட, பாவத்திற்கு ஏற்றபடி பார்வை சுழல, தாளத்திற்கு பொருத்தமாக அவரது பாதங்கள் ஆடின. பார்வையானது மனதைத் தொடர, மனதானது பார்வையைத் தொடர்ந்ததால் ரசனை உருவாகி, அங்கு ஆனந்த சூழ்நிலை உருவாகியது. அவரது ஒவ்வொரு அசைவிலும், பாவனையிலும் பொருள் இருப்பதை நீலகண்டன் உணர்ந்தான். இத்தகு தெய்வீக மயக்கத்தில் திளைத்த அவன், கண்களை மூடிக் கொண்டு இறைவனது பஞ்ச முகங்களையும், அஷ்ட மூர்த்தி வடிவையும் கூர்ந்து

கவனிக்கலானான்.

ஐந்து செயல்களான (1) ஸ்ருஷ்டி(ஆக்கல்) என்பதை அவரது கையில் உள்ள உடுக்கை குறிக்கின்றது. (2) ஸ்திதி(காத்தல்) என்பதை மேல் எழும்பியுள்ள அவரது கைகள் காட்டுகின்றது. (3) ஸம்ஹாரம்(அழித்தல்) என்பது அவரது உடல் முழுவதும் தவழ்ந்திருக்கின்ற அரவங்கள் உணர்த்துகின்றது. (4) திரோபாவம் என்னும் அஞ்ஞான இருளினை போக்குவது போல் அவரது கலைந்த ஜடாமுடி காணப்படுகின்றது. (5) அனுக்ரஹம் என்பது அவரது தூக்கிய பாதமும், கீழாக அமைந்துள்ள கைகளும் குறிக்கின்றன. நடராஜரைச் சுற்றி சுழன்று கொண்டிருந்த தீ ஜ்வாலைகள் ப்ரணவத்தையும், அவரது பூர்ணத்த்வத்தையும் குறிக்கின்றது. ஸபாபதியின் நாட்யத்தைக் கண்டுகளித்த யோகியின் மனத்தாமரையில் சொல்லொணா மகிழ்ச்சி பரவிற்று. அதிசயப்பட்ட அவன் மெதுவாக கண்களைத் திறந்தான்.

இறைவனது ஆனந்ததாண்டவம் மிகவும் அற்புதமானது. நடனம் நிறைவுற்றதை அறிவிக்க பதினான்கு முறைகள் 'கொட்டு' முழங்கப்பட்டது.

இத்தாண்டவமானது, மெய் சிலிர்த்த நீலகண்டனின் மனதினை கலக்கி அவனைத் தூய்மையடையச் செய்தது. இனி எப்போதும் அவனது மனத்தாமரையில் நடனம் புரிந்து அருள் செய்ய வேண்டும் என திருக்காளத்தீஸ்வரரை வேண்டிக்கொள்ள அவரும் அந்த யோகிக்கு அமைதியையும், வளத்தையும் அளித்து ஸாயுஜ்ய முக்தியும் விரைவில் கிடைக்கப் பெறுவாய் என தன் பக்தனை ஆசீர்வதித்து மறைந்தார்.

(திருக்காளத்தி கோவிலுக்கு ஸமீபத்தில், தெற்கு திசையில் 'நடராஜ ரங்கஸ்தலா' எனும் மண்டபம் காணப்படுகின்றது. இந்த மண்டபத்தில் நடராஜர், கணபதி, ஸுப்ரம்மண்யர் முதலானோர் நடனம் புரியும் தோற்றத்தில் காணப்படுகின்றார்கள். மேலும், அங்கு காணப்படும் ஆலிங்கனமூர்த்தி, பிக்ஷாடனர் போன்ற சிற்பங்கள் தக்ஷிண கைலாயமலையில் மிக அற்புதமாக செதுக்கப்பட்டுள்ளது.)

## அத்யாயம் - 21

# பத்மஸேனன்

நெடுங்காலத்திற்கு முன் காஷ்மீரத்திலுள்ள 'ஸ்ரீநகரினை' யமத்வஜன் என்னும் அரசன் ஆண்டு வந்தான். அவனுக்கு ஸத்யவதி, காந்திமதி என்னும் ஈடு, இணையில்லா அழகினைப் பெற்ற இரு மனைவியர் இருந்தனர். மூத்தவளின் குமாரனான பத்மஸேனன் சிறந்த ஆற்றலோடு நல்ல கம்பீரமும் பொருந்தியவனாய் இருந்தான். இளையவளின் புதல்வனான 'ஹேமப்ரபு' அற்புதமான அழகனாக இருந்தான். மன்னன் எப்போதும் தனது இளைய மனைவியை த்ருப்தி படுத்துவதிலேயே கவனமாக இருந்தான். மைந்தர்கள் வளர்ந்து தக்க வயதுடையவராக ஆனதும் ஆட்சி பீடத்தினை இளையவளின் புதல்வன் ஹேமப்ரபுவிடம் ஒப்படைக்கத் தயாரான நிலையிலிருந்தான் மன்னன். ஸத்யவதியும், அவளது மகனும் அடிமைகளைப் போல் நடத்தப்பட்டனர். ஏன் இளையவளுக்கும், அவளது புத்ரனுக்கும் கூட சேவகம் புரியும் நிலைக்கு அவர்கள் கொண்டுவரப்பட்டனர். ஆயினும், ஸத்யவதி தனது கணவனது நிழலில் வாழ்வதையே பெரும்பேறாக நினைத்தாள். சிறிது காலத்திற்குப் பின்னர் ஹேமப்ரபு பத்மஸேனனை சிறையில் அடைக்கத் திட்டம் தீட்டினான். தவறு நேரக்கூடாது என்பதில் கவனமாக இருந்த அரண்மனைப் புரோஹிதர் மன்னனை அணுகி, நீதி சாஸ்த்ரங்களை நன்கு அறிந்த என் மன்னவ! தற்போது நடந்து கொண்டிருக்கும் நிகழ்ச்சிகள் யாவும் பெரியதோர் தவறுக்கு அடிகோலுவது போல் உள்ளது. இளைய ராணியின் மீதுள்ள விருப்பத்தால் நீர் நற்குணம் பொருந்தியவனும், 'நீதி சாஸ்த்ரங்களை அறிந்தவனுமான பத்மஸேனனை புறக்கணிக்கின்றீர். அவனிடம் ஆட்சிப் பொறுப்பினை அளிப்பதை விடுத்து இளையவனுக்கு அதிகாரத்தை கொடுத்திருக்கின்றீர். இதனால் நம் நாடு நிலை குலைந்து அதல பாதாளத்தில் வீழ்ந்து விடுமோ என எனக்கு கவலையாக இருக்கின்றது. நான் மூன்று அறிவுரைகளை உமக்கு அளிக்க விரும்புகிறேன். (1) அனைத்து ஆட்சிப் பொறுப்பினையும் பத்மஸேனனிடம் ஒப்படைக்க வேண்டும் அல்லது (2) நாட்டினை இரு பாகங்களாக்கி இரு புதல்வர்களுக்கும் ஸமமாக அளிக்க வேண்டும் அல்லது (3) மூத்த குமாரனை தொலைதூர நகரங்களுக்கு அனுப்ப வேண்டும்' என்று புரோஹிதர் முறையிட்டார். இந்த அறிவுரைகளை

செவியுற்ற மன்னன் இருதலைகொள்ளி எறும்பாய் தவிக்க இறுதியில் மூன்றாவது வழியே சிறந்தது என முடிவு செய்து மூத்த குமாரனை தொலைதூர நாடுகளுக்கு புரோஹிதருடன் அனுப்பினான்.

பல இடங்களுக்கு விஜயம் செய்த பின்னர் இருவரும் வாரணாசியை அடைந்தனர். அங்கு நாரத மஹரிஷி, முனிவர்களுக்காக நிகழ்த்திக் கொண்டிருக்கும் கதா காலக்ஷேபத்தை இருவரும் செவியுற்று மகிழ்ந்தனர். திருக்காளத்தீஸ்வரரையும், ஸ்வர்ணமுகியின் சிறப்பினையும் பற்றியும் அறிந்து கொண்டனர். குதூஹலமடைந்த இருவரும் திருக்காளத்தியை அடைந்து ஸ்வர்ணமுகியில் நீராடி வாயுலிங்கத்தை வழிபட்டு மார்கண்டேய முனிவரை தர்சிக்கும் பேற்றை அடைந்தனர். அவரை பக்தியுடன் ஸேவித்து தமது சோகக் கதையினை அவருக்குத் தெரிவித்தனர். 'இத்திருத்தலத்தின் மண்ணினை மிதித்தது நீங்கள் செய்த பாக்யமே' என்றுரைத்த முனிவர் ஸத்யமித்ரனின் அறிவாற்றலை உணர்ந்து கொண்டு அவனைத் தனியே அழைத்து சிவலிங்கத்தை ப்ரதிஷ்டை செய்யும் முறைகளை விளக்கி, சிறந்த வழிபாட்டு முறையான, 'சைவ பஞ்சார்ணவ சதுரங்க விதானம்' பற்றி விளக்கினார். பத்மஸேனனுக்கு இவ்வழிபாட்டைப் பற்றி விளக்குமாறும், மேலும் இளவரசன் த்யானம் செய்வதற்குரிய மந்திரத்தையும் உபதேசித்தார்.

அதன்படியே ஸத்யமித்ரனும், பத்மஸேனனும் ஸ்வர்ணமுகி நதியில் நீராடி, வாயுலிங்கத்தை வழிபட்டு, சிவலிங்கத்திற்கு மேற்கு திசையில் ஒரு இடத்தை தேர்ந்தெடுத்தனர். மார்கண்டேயர் கூறியபடி ஸத்யமித்ரன் சிவலிங்கத்தை வடிவமைக்க பத்மஸேனன் ப்ரதிஷ்டை செய்து, சிவபஞ்சாக்ஷரி மந்திரத்தை சதுரங்க விதானப்படி ஜபிக்கலானான். பத்மஸேனன் வழிபாட்டில் ஆழ்ந்திருக்கும் நிலையில் அவனை அவ்விடத்திலேயே விட்டுவிட்டு ஸத்யமித்ரன் மட்டும் தாய்நாடு திரும்பினான். பத்து வருடங்களுக்கு பின்னர், தை மாதத்தின் சுக்ல பக்ஷத்தின் பதினான்காம் நாள் ஸகல தேவர்களுடனும் திருக்காளத்தீஸ்வரர் இளவரசனுக்கு காட்சி தந்தார். கண்களில் நீர் மல்க இறைவனை வணங்கி பாமாலைகள் பல ஸமர்பித்தான். 'சாஸ்த்ரப்படி நீ செய்த வழிபாட்டினால் யாம் உனது பக்தியினால் ஈர்க்கப்பட்டோம். உனது பெயருக்கேற்றவாறு எவராலும் வெல்லமுடியாத நூறுகோடி ஸேனைகள் அடையப் பெறுவாய். மேலும் பல நாடுகளை வெற்றி கொண்டு உனது நாட்டினை

விஸ்தாரமாக்கி நீண்ட காலம் அரசாட்சி புரிவாயாக! உன்னால் ஸ்தாபிக்கப்பட்ட இந்த லிங்கம் 'ஸம்பத்ப்ரதேஸ்வரர்' என்னும் நாமம் கொண்டதாய் விளங்கும்' என ஆசீர்வதித்து இறைவன் மறைந்தார்.

இறைவனது கூற்றுப்படி பெரும் படையினை அடைந்து, செல்வத்தினையும், பெரும் ஸாம்ராஜ்யத்தினையும் உடையவனாக பத்மஸேனன் இருக்கக் கண்டு பெற்றோர் மனம் மகிழ்ந்தனர். தனது அண்ணனது திறமையை உணர்ந்து கொண்ட ஹேமப்ரபுவும் அவனுக்கு உதவியாக இருந்தான். இறுதியில் பத்மஸேனன் சங்கரனின் உறைவிடமான சிவலோகத்தையடையும் புண்யம் பெற்றவனானான்.

## அத்யாயம் - 22

## யோகினி நீலா

இமாலயத்தின் தெற்கில் மாளவம் என்னும் தேசத்தில் தர்மாத்மா என்னும் அந்தணருக்கு 'ஞானகலா' என்ற ஒரு மகள் இருந்தாள். சிறந்த அறிவாற்றலோடு விளங்கிய அவள் தன் முன்வினைப் பயனாக இளவயதிலேயே விதவைக் கோலம் பூண்டாள். மிதிலாபுரி அரசர் ஜனகரிடமிருந்து ப்ரம்ம வித்தையைக் கற்று 'யோக வித்யா' என்னும் பட்டத்தைப் பெற்றாள். தன்னுடன் வாதிடும்படி பல முனிவர்களை அழைத்து, அவர்களை வென்று அவமானப்படுத்தினாள். மேலும் நேபாள நாட்டைச் சேர்ந்த 'கௌண்டரவ்ய' என்ற மாமுனியை வெற்றி கொள்ள விரும்பி வேதாந்த கலந்துரையாடலுக்காக அவரை அழைத்தாள்.

அவள் ஆணவத்தைக் கண்டு முனிவர் வெகுண்டாலும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு மற்ற சிறந்த சான்றோர்களுடன் வாதிடும்படி அறிவுறுத்தினார். 'ஞானகலா'தனக்கே உரிய அகந்தையினால் முனியை மீண்டும் வற்புறுத்தவே, முனிவர் அம்மங்கையை நோக்கி, ஓ! ஞானகலா! நீ ப்ரம்மத்தை அறிந்தவளா ? அறியாதவளா ? என்று வினவ கேள்வியின் ஸூக்ஷ்மத்தை சரிவர உணராது 'தான் ப்ரம்மத்தை அறிந்தவள் தான்' என பதிலுரைத்தாள். முனிவர் அவளை நோக்கி, 'யார் ப்ரம்மத்தை உணர்ந்திருந்தாலும், தான் உணரவில்லை என்றே கூறுவர். புலன்களாலும்,

வார்த்தைகளாலும் விவரிக்க முடியாத ப்ரம்மத்தை 'அறிவேன்' என்று உரைக்கின்றாய். பல சான்றோர்களை வாதத்தில் வென்று உதாஸீனப்படுத்தியமைக்காக, நீ பேயாகத் திரியக்கடவாய் எனச் சபித்தார். தன்சாப விமோசனத்திற்காக ஏங்கிய போது முனியும் நீ சிறிது காலம் அவதியுற்ற பின்னர் அகத்திய முனியை தர்சிக்கும் போது அவர் உனக்கு வழிகாட்டுவார் எனக் கூறினார்.

அவள் கறுப்பு நிறமும், கோரைப் பற்களும், அருவறுக்கத் தக்க உடல் பாகங்களைப் பெற்ற தோற்றத்துடன் கூடிய நீல பிசாசாக மாறினாள். இப்பிசாசினால் மக்கள் பலவகையான கடுந்துன்பங்களுக்கு ஆளானார்கள். திக்கு திசை தெரியாது, அங்கும் இங்கும் அலைந்து திரிந்து, அகத்திய மாமுனியின் ஆச்ரமத்தின் அருகே சென்றபோது, அங்குண்டான ஹோமக் காற்றினால் ஞானகலாவின் உண்மையான அறிவு மெல்ல மெல்ல வெளிப்பட்டு, அகத்தியரை சரணடைந்து, அவர்தம் அறிவுரைபடி ஸ்வர்ணமுகி நதிக்கரையில் அமைந்துள்ள தக்ஷிண கைலாயத்தை அடைந்து, பைரவ மந்திரத்தோடு வாயுலிங்கத்தை வழிபட்டாள். அவள் வழிபட்ட இடம் 'நீலாசலா' என அழைக்கப்படுகிறது. அவளது தவத்தின் பயனாக வைகாசி பௌர்ணமிக்கு மூன்றாம் நாளன்று பைரவர் அவள் முன் தோன்றி சூலத்தின் முனையால் அவளை எடுத்து சுழற்றி வாயுலிங்கத்திற்கு அருகிலுள்ள மணிகர்ணீஸ்வரர் லிங்கத்திற்கு அருகில் வீசினார். லிங்கத்திலிருந்து தன் தேவியுடன் வெளிவந்த பரமன், அவளது தலையை மடியில் கிடத்தி, மெதுவாக வருடி, அவளது வலது காதில் ப்ரணவ மந்திரத்தை போதித்து முக்தியளித்தார்.

ப்ரணவத்தை பொருளாகக் கொண்ட 'ஹர' என்னும் பதத்தை வேதங்கள் புகழ்கின்றன. மணிகர்ணீஸ்வர லிங்கத்தின் வடிவிலுள்ள சங்கரன், ஒருவனது கடைசி காலத்தில் வலது காதில் ப்ரணவத்தை போதித்தால் அவர்களுக்கு மோக்ஷம் நிச்சயம் கிட்டும்.

## அத்யாயம் -23

# ஹர ஹர

கோஸல நாட்டில், சிவத்விஜா என்ற அந்தணன் தீய பழக்கங்களுக்கு அடிமையாகி, ஸோமேஸ்வர ஆலயத்தில் நகைகளை திருடியதன் காரணமாக சிறையில் அடைக்கப்பட்டு, அவதியுற்று இழி சூழ் நிலையிலேயே மாண்டு போனான். பின்னர் பல பிறவிகள் எடுத்து கடைசியில் கரபன் என்னும் வேட்டுவனாக பிறந்தான். இப்பிறவியிலும் துர்நடத்தையுள்ளவனாக இருந்ததால் அவன் மனைவி, மக்கள் முதலானோர் அவனை விட்டு நீங்கினர். எதிலும் பற்றற்று சிலகாலம் அலைந்து திரிந்த பின்னர், கொள்ளைக்காரனாக மாறி, வழிப்போக்கரை எல்லாம் துன்புறுத்தி நூறாண்டுகள் வாழ்ந்து ஒரு கிணற்றில் விழுந்து இறந்தான். அவன் நரகத்தின் ஒரு பகுதியான 'அதிகோரா' என்னும் இடத்திற்குச் சென்று உழலுமாறு நேர்ந்தது.

ஒரு சமயம் ஸானந்தர் என்னும் முனிவர் யமராஜனை தர்சிப்பதற்காக யமலோகத்திற்கு விஜயம் செய்தார். அங்கு உழலும் பாபிகளைக் கண்டு மனம் இளகிய முனிவர் உன்னதமான பஞ்சாக்ஷரி மந்திரத்தை ஜபம் செய்ய, பாபிகள் அனைவரும் நரகத்திலிருந்து விடுபட்டு கைலாயத்திற்குச் சென்றனர். இவரினும் கொடிய பாபி யாரேனும் உளரா என முனிகள் வினவ, கரபன் அங்கு வரவழைக்கப்பட்டான். முனிவர் ஹர ஹர என்ற வார்த்தைகளை தனது உச்ச ஸ்தாயியில் ஒலிக்க பாபி கரபன் அதை தன் உபதேச மந்திரமாக ஏற்றுக் கொண்டு முனிவரை குருவாக எண்ணி வணங்கினான். அவன் மீது பரிவு கொண்ட ஸானந்தர் அவனை தக்ஷிண கைலாயத்திற்குச் சென்று 'ஹர' என்னும் நாமம் கொண்ட அந்தணனாக பிறவி எடுக்குமாறு ஆசீர்வதித்தார்.

ஹர என்று ஒருமுறை உச்சரித்தால் முன் வினைகள் அனைத்தும் தொலையும். இருமுறை உச்சரித்தால் உலக மாயையான பிறப்பு, இறப்புகளிலிருந்து விடுவிக்கப்படுவர். சிறந்த தவ வலிமையுடைய முனிவர் 'சத நாமாப்ஜ மாலா' என்ற பெயர் கொண்ட திருக்காளத்தீஸ்வரரின் நூறு திருநாமங்களாகிய மாலையினை தர்மராஜனுக்கு அளித்து அவனை மேன்மைபடுத்தினார்.

தக்ஷிண கைலாயத்தில் சிறந்த சிவ பக்தர்களாக வாழ்ந்து வந்த ஸுசீலர், ப்ரியம்வதை தம்பதியினருக்கு மக்கட்செல்வம் இன்மையால் அடைந்த வேதனைகள் சொல்ல முடியாது. சிறிது காலத்திற்குப் பிறகு ஸானந்தரால் ஆசீர்வதிக்கப்பட்ட கரபன் மறு பிறவியில் ஸுசீலர், ப்ரியம்வதை தம்பதியினருக்கு 'த்ரிகாலக்ஞ ஸாகர' என்னும் தவப்புதல்வனாகப் பிறந்தான். பெற்றோர் மறைவுக்குப் பின்னர் செல்வமனைத்தையும் சிவனடியார்களுக்கு தானம் அளித்துவிட்டு, வாயுலிங்கத்திற்கு ஆறு மைல் தொலைவிலுள்ள 'மித்ர க்ஷேத்ரம்' என்னும் இடத்தை அடைந்து நீர் மட்டுமே குடித்து ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக ஹர ஹர என்ற ஜபத்தை ஜபித்து தன் மனதை ஒருநிலைப்படுத்தினான்.

மாசி மாதம் பௌர்ணமி கழிந்த ஏழாம் நாள் திருக்காளத்தீஸ்வரர், ஞானப்ரஸுனாம்பிகை, நந்தி, பூதகணங்கள் ஸமேதராக த்ரிகாலக்ஞ ஸாகருக்கு காட்சியளித்து அவனுக்கு 'ஹர ஹர' என்னும் நாமத்தைச் சூட்டி அருள் செய்தார்.

ஹரஹர தீர்த்தத்தில் நீராடி ஹரஹர லிங்கத்தை பூஜை செய்தால் ஸாயுஜ்ய முக்தி பெறுவோம் என்பது திண்ணம்.

## அத்யாயம் - 24

## மயூரன்

கேரளதேசத்தில் அந்தணர் குலத்தில் பிறந்து, வாழ்ந்து வந்த மயூரன் என்னும் துர்குணங்கள் கொண்டவன், தன் தந்தையின் சொத்துக்களை அடைய வேண்டி, உறக்கத்திலேயே அவரைக் கொன்று, தீய பழக்கங்களினால் ஆக்ரமிக்கப்பட்டு, தனது செல்வத்தின் பெரும்பகுதியை இழந்தான். மூப்பினை அடைந்த போது, தனது இளவயது செயல்களை எண்ணி வருந்தி, பாப மன்னிப்பிற்காக தன் குடும்ப புரோஹிதரான சந்திரகரை சரண் புகுந்தான். மனம் நெகிழ்ந்த புரோஹிதர் அவனை, புனித தீர்த்தங்களுக்குச் சென்று நீராடும்படியும், அங்குள்ளோருக்கு தக்க பரிசுகள் வழங்குமாறும், தாமும் மயூரனுக்கு துணை வருவதாயும் கூறினார்.

இருவரும் நூற்றுக்கணக்கான தீர்த்தங்களுக்குச் சென்று

நீராடி, உண்ணா நோன்புகளை அனுஷ்டித்து, தேவர்களுக்கும், பித்ரு தேவதைகளுக்கும் உரிய வழிபாடுகள் செய்தனர். மேலும் தக்ஷிண கைலாயத்தையடைந்து, ஸ்வர்ணமுகியில் நீராடி, அங்கு காணப்படும் உமா மஹேஸ்வாரின் திருவடிவான மலைச் சிகரத்தையும் தர்சித்து அம்மலையை நோக்கி நடக்கத் தொடங்கினர். அவர்களது உண்மையான பக்தியின் தீவிரத்தை சோதிக்க விரும்பிய எம்பெருமான் 'அஜய்' என்னும் மாயையை அழைத்து சில கட்டளைகளை இட்டார். அதன்படி அவளும் பெரிய மதங்கொண்ட யானையாக உருவெடுத்து, பயங்கரமான பிளிரலுடன் வழியில் காணப்படும் அனைத்தையும் அழித்து நாசம் செய்து, இவர்கள் இருவரையும் நோக்கி ஓடி வந்தது. இதனைக் கண்டு நடு நடுங்கிய சந்திரகர் தன் நண்பனைக் கைவிட்டு அவனது விலை மதிப்பற்ற பொருட்களை எடுத்துக் கொண்டு ஓடினார். மயூரனோ செய்வதறியாது திகைத்து அந்த மதங்கொண்ட யானைக்கு ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தான். கண்களைத் திறந்து எழுந்து நின்ற போது ஒரு சிவனடியாரைக் கண்டான். அவரை வணங்கி, தனது சோகக் கதையையும், தன் நண்பன் கை விட்டதையும் எடுத்துக் கூறி தனக்கு ஓர் நல்வழி காட்டுமாறு வேண்டிக் கொண்டான். கருணை கொண்ட சிவனடியாரும் ஸ்வர்ணமுகி நதியில் நிதமும் நீராடி, வாயுலிங்கத்தை பூஜித்து 'சிவ அஷ்டாக்ஷரி' யை த்யானம் செய்யும்படியும் உபதேசித்தார். பின்னர் மறைந்து போனார்.

அன்று முதல் மயூரன், புனிதமான மந்திரத்தை ஜபித்து, சிவலிங்கத்திற்கு பூஜை செய்து ஒரு வருடத்தைக் கழித்தான். பாத்ரபத மாதத்தில், பௌர்ணமி நன்னாளில் ஸ்ரீ ஞானப்ரஸூனாம்பிகா மற்றும் பல சிவகணங்களுடன், திருக்காளத்தீஸ்வரர் லிங்கத்திலிருந்து தோன்றினார். 'ஏ! மயூர! ஸ்வர்ணமுகி போன்ற பல புண்ய தீர்த்தங்களில் நீராடியதன் காரணமாக நீ தூயவன் ஆனாய். புனித மந்திரத்தை ஜபித்ததால் உன் பாபங்கள் அனைத்தும் மறைந்து விட்டன. இந்த மானிடப்பிறவி முடிந்ததும் நீ என்னை அடைவாயாக!' என்று கூறினார். மயூரனும் ஆனந்தக் கடலில் நனைந்து, திளைத்து, எம்பெருமானின் திருவருளை நினைத்து பக்தி வெள்ளத்தில் நீந்தத் தொடங்கினான்.

## அத்யாயம் - 25

# பீமன்

கௌட தேசத்தில் வாழ்ந்து வந்த பீமன், விஸ்வமாரரின் புத்ரனும், ஹரஹரனின் பேரனுமாவான். சிறந்த பண்டிதனான பீமன் பல புண்ய தீர்த்தங்களில் நீராடியும், இறைவனை வழிபட்டும், தென்திசையில் உள்ள, வ்ருத்தாசலம் என்னும் இடத்தை அடைந்து அங்கு வாழ்ந்து வந்த சிவபக்தரான 'நாதசர்மா'விற்கு நண்பரானான். சான்றோரரான நாதசர்மா பல அரிய நூல்களைக் கொண்ட நூல் நிலையம் ஒன்றை பராமரித்து வந்தார். சிதம்பரத்திலே தன் ஒற்றைக் காலைத் தூக்கி நடனம் செய்யும் பெருமான் நடராஜனை தர்சனம் செய்ய ஆவல் கொண்டு, நூல் நிலையத்தை தனது நண்பன் பீமன் பொறுப்பில் விட்டு விட்டு சிதம்பரத்திற்கு ப்ரயாணமானார். வ்ருத்தாசலத்திற்கு திரும்பிய போது தன் நூல் நிலையத்திலுள்ள பல அரிய நூல்கள் காணாமற் போனதை அறிந்து கவலையுற்று, அது பற்றி பீமனிடம் வினவ, நூல்களை பேராசையால் அபஹரித்துக் கொண்ட பீமன் தனக்கு ஒன்றும் தெரியாதுஎன அப்பாவி போல் நடித்தான். இதனால் மிக்க துக்கம் அடைந்த நாதசர்மா நான் ஒரு சிறந்த பக்தனானால் என் நூல்களைத் திருடியவர்கள் ஊமையாகக் கடவார்கள் என சபித்தார். உடனே பீமனும் பேசும் சக்தியை இழந்து, வேதனை அடைந்து, திருடிய நூல்களை திருப்பிக் கொடுத்து தனக்கு பாப மன்னிப்பு அளிக்குமாறு வேண்டினான்.

வேதனையில் மூழ்கிய பீமன் அங்கும் இங்கும் அலைந்து திரிந்து ஸ்ரீ சைல க்ஷேத்ரத்தில் ரோமச முனிவரைக் கண்டு வணங்கி அவரால் உபதேசிக்கப்பட்ட 'பஞ்சதசாக்ஷரி' என்னும் மந்திரத்தை ஜபித்துக் கொண்டு, தக்ஷிண கைலாயத்தில் பாய்ந்து வரும் ஸ்வர்ணமுகி நதியில் நீராடி வாயுலிங்கத்திற்கு அருகே ஒரு லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து வழிபட்டு வந்தான். மேலும், பூஜையின் போது கடைபிடிக்க வேண்டிய ஸங்கல்பம், சந்தங்கள், தேவதை, பீஜம், சக்தி, கீலகம், ந்யாஸம், பஞ்சதசாக்ஷரிக்கு உரிய த்யான ஸ்லோகங்கள் ஆகியவற்றை செவ்வனே செய்து முடித்து மந்திரத்தை ஒன்பது லக்ஷங்கள் முறை ஜபிக்கலானான். இவ்வாறாக எட்டு மாதங்கள் கழிந்த பின்னர் பாத்ரபத மாதத்தில், பௌர்ணமி சென்ற மூன்றாம் நாள், தேவி ஞானப்ரஸூனாம்பிகா அவன் முன் காட்சியளித்து பேசும் ஆற்றலை அவனுக்கு அளித்தாள்.

ஆனந்தத்தின் உச்ச நிலையை அடைந்த பீமன் அம்மையை மும்முறை வலம் வந்து, வணங்கி, 'தேவி! ஸ்ரீ சக்ரத்தில் வீற்றிருக்கும் நினது ஸிம்மாஸனத்தின் நான்கு கால்களாக ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன், ஈஸ்வரன் முதலானோர் இருப்பர். உனது வடிவானது பிந்து, நாத, கலா வடிவுடன், சப்த, பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ இவற்றின் காரணமாகவும், ப்ரணவத்தின் உட்பொருளாகவும் விளங்கும் உன்னை நான் துதிக்கிறேன். மது சூழ்ந்திருக்கும் ஆயிரம் இதழ்களைக் கொண்ட தாமரை மலரைப் போல் ஜ்வலிக்கும் உனக்கு நற்முத்துக்களாலான மாலையைப் போன்று ஸ்வர்ணமுகியானவள் உன்மேல் தவழ்ந்து கொண்டிருக்கிறாள். உலகிற்கெல்லாம் தாயான அம்பிகை பீமனுக்கு பல வரங்களை அளித்தாள். பாத்ரபத மாதத்தில், பௌர்ணமி சென்ற மூன்றாம் நாள், ஸ்வாதி நக்ஷத்ரத்திலே யார் பீம தீர்த்தத்திலே நீராடுகிறார்களோ அவரது ஊமை நிலை நீங்கப் பெறும். அந்த நன்னாளில் மஹேஸ்வரரின் முன்னிலையில் பஞ்சதசாக்ஷரி மந்திரத்தை ஜபிப்பவர்களுக்கு அவர்களது விருப்பம் நிறைவேறும்.

அன்னையினது அருளுக்கு பாத்ரமான பீமன், 'ஸ்ரீ சைலத்தை அடைந்து' ரோமச முனிவரின் ஸந்நிதியில் முக்தியடைந்தான்.

## அத்யாயம் - 26

# மார்கண்டேயர்

முன்னொரு காலத்தில், •ஒருசமயம், வ்யாஸர், வஸிஷ்டர், புலஹர், காஸ்யபர், அத்ரி, மார்கண்டேயர், கௌதமர், கண்வர் முதலான முனிவர்கள், கேதார்நாத்திற்குச் சென்று தத்தம் உறைவிடத்திற்குத் திரும்பிக் கொண்டிருந்தனர். அப்போது மார்கண்டேய முனிவருக்கு சில ஸந்தேஹங்கள் எழுந்தது. (1) பூலோகத்தில் வாழும் மானிடர்கள் பலவகையான பாபங்களைச் செய்கின்றனர். அவ்வாறு செய்யப்பட்ட பாபங்களின் பலன்களை அனுபவித்தே ஆக வேண்டும். ஆயினும், சில ப்ராயச்சித்தங்கள் செய்வதன் மூலம் பாபங்களின் பலன்கள் பிடியிலிருந்து மீளலாம் என சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. இங்ஙனம் ஏதுமின்றி, எவரது, எந்தக்

கடவுளது நாமத்தை உச்சரித்த மாத்ரம், பாபங்களை நீக்கலாம்? எந்தக் கடவுள் தம் பக்தர்கள் மனதினில் ஏற்படும் அச்சங்களைப் போக்குகிறார்? என்று வினவினார். அங்கு குழுமியிருந்த முனிவர்கள் அவர்கள் கூற்றை வெளிப்படுத்தினர். அப்போது வ்யாஸர், இறைவன் சங்கரனது பாதகமலங்களை நினைத்த மாத்ரம் கொடும்பாபியும் கூட தூயவனாக முடியும். மக்களின் பீதிகளைப் போக்குகின்றவர் அவரே என உரைத்தார். அப்போது வஸிஷ்டர் அவரது கூற்றை மறுத்து பெருமாளின் நாமஸ்மரணையே அனைத்து பாபங்களையும் போக்க வல்லது என்று உரைத்தார். முனிவர் புலஹர் இவ்விரண்டு ஸந்தேஹங்களுக்கு உரிய விடை ப்ரம்மதேவரிடமே உள்ளது எனக் கூறினார். அங்கு கூடி இருந்த முனிவர்களுள் ஒருவர் இந்திரனே அனைத்தையும் போக்க வல்லவர் என உறைத்தும், மற்றொருவர் அக்னிதேவனே என்றும், மற்றும் ஒருவர் ஸூர்யக் கடவுளே என்றெல்லாம் தங்களது கருத்துக்களை மார்கண்டேயர் முன் வைத்தனர். இதனால் அவர் அதிகக் குழப்பம் அடைந்தார். ஸந்தேஹங்களினால் ஆளப்பட்ட மனிதர்களுக்கு இக, பர ஸுகம் ஏதும் கிடையாது. 'ஸம்சயாத்மா விநச்யதி' என்ற கூற்றுக்கு ஏற்ப அவன் நாசமடைவான். மறுவாழ்வின்றி அவதிப்படுவான்.

முனிவர் தம் ஸந்தேஹங்களுக்கு உரிய விடையைத் தேடி அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருக்கையில் அத்ருஷ்ட வசமாக அவருக்கு அகத்திய முனிவரின் தர்சனம் கிடைத்தது. அவரை வணங்கி, அவர்தம் ஆசி பெற்று, தம்முள் எழுந்த வினாக்களை அவர் முன் வைத்தார் முனிவர். அகத்தியரும் கருணையுடன் அவரை நோக்கி, உமது ஸந்தேஹங்கள் யாவும் உண்மையானவை. ஸாதாரண முனிவர்களால் அவற்றை தீர்க்க முடியாது. நான் உனக்கு ஒரு வழி கூறுகிறேன். உன்னை யமனது பிடியின்று காத்த இறைவன் சங்கரனே, உன் ஸந்தேஹங்களுக்கு விடை தருவதில் வல்லவனாவான். நீ தக்ஷிண கைலாயத்திற்குச் சென்று தவம் செய்து, அனைவரையும் ரக்ஷிக்கும் பரம் பொருளால் விடை கிடைக்கப் பெறுவாய் என வழி காட்டினார். இதனால் மனம் மகிழ்ந்த மார்கண்டேயர் தக்ஷிண கைலாயத்திற்குச் சென்று, ஸ்வர்ணமுகி நதியில் நீராடி சாஸ்த்ரப்படி வாயுலிங்கத்தை வணங்கி வழிபட்டார். மறு நாள் வாயுலிங்கத்திற்கு தெற்கே ஐந்து மைல்கள் தொலைவில் 'மங்களாயன க்ஷேத்ரம்' என்னும் இடத்தில் தன் குடிலை அமைத்துக் கொண்டார். அவ்விடத்தில் ஒரு லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து, பரம பக்தியுடன் வழிபட்டு தவத்தில் மூழ்கினார்.

மாசி மாதம் முதல்நாள், இறைவன் அவருக்கு காட்சியளித்தார். பல தேவர்களாலும், தெய்வத்வம் பொருந்தியவர்களாலும் அவர் சூழ, ரிஷப வாஹனத்தில் காட்சியளித்துக் கொண்டிருந்தார். முனிவரின் தவத்தை மெச்சிய பரமேஸ்வரன், பக்தனே! உனக்கு என்ன வேண்டும் ? எனக் கேட்க, முனிவரின் மகிழ்ச்சி எல்லையற்றதாயிற்று. ஸந்தேஹங்களினால் நேர்ந்த தம் குழப்பங்களை இறைவன் முன் ஸமர்பித்தார்.

பரமேஸ்வரனும், 'ஓ! ம்ருகண்டுவின் புதல்வனே! எல்லா வகையான பாபங்களின் ப்ராயச்சித்தமெதுவென்றால் குருவினது பாதாரவிந்தங்களை ஸ்மரணம் செய்வது. உண்மையில் நானும், ஹரியும், ப்ரம்மதேவனும் கூட குருவினது பாதகமலங்களை வழிபடுகின்றோம். உனது (1) தந்தை (2) உபநயனம் செய்தவர் (3) நீ கற்பதற்கு காரணமாக இருப்பவர் (4) உன்னைக் காப்பவர் (5) உனது அச்சத்தை போக்குபவர் ஆகிய இந்த ஐந்து பேர்களே குருக்களாக கருதப்படுவர். அவர்கள் இந்திரனாகவும், ப்ரம்மனாகவும், விஷ்ணுவாகவும், குருவாகவும், நானாகவும் முறையே வணங்கப்படுவர். ஆற்றை படகில் கடக்க வேண்டுமானால் நல்ல ஒரு படகோட்டி தேவை. அது போல ஸம்ஸாரக் கடலைக் கடக்க வேண்டுமெனில் ஆச்சார்யனின் உதவி தேவை. குறையற்ற கண்ணாடியில் நம் முகம் தெளிவாகத் தெரிவது போல குருவானவர் நமக்கு அனைத்தையும் தெளிவிக்கிறார். குருவின் முன்னிலையில் மனம் தூய்மைபட்டு, ப்ரகாசம் அடைந்து ஆனந்தத்தை எய்துகின்றது. குருவினால் மட்டுமே நம் அச்சங்களைப் போக்கி ஞானம் அடைவதற்கு உரிய தடைகளைத் தகர்க்க முடியும் என ப்ரச்ன, சாந்தோக்ய போன்ற உபநிஷத்களால் விளக்கப்பட்டிருக்கின்றன. குருவினது உபதேசத்தால் சிறந்த அறிவாற்றலைப் பெற முடியும். அஞ்ஞான இருட்டிலிருந்து வெளிச்சம் என்னும் ஞானத்தைப் போதிக்க வல்ல குரு நானே என்பதை நீ அறிந்து கொள். குழப்பம் நீங்கப் பெற்ற முனிவர் பரம் பொருளை ஸேவித்து, புகழ்ந்து பாடி 'ஓ! திருஞானப்ரஸூனாம்பிகைக்கு ப்ரியமானவரே! உம்மை சிறிதளவு பக்தியுடன் தொழுபவர்களுக்குக் கூட மகிழ்ச்சி அள்ளி வழங்குபவரே! இடது காலால் காலனை உதைத்து தள்ளியவரே! உமது மூன்றாவது கண்ணான நெற்றிக்கண்ணை திறந்த மாத்ரத்திலேயே த்ரிபுரம் எறிந்து கைப்பிடியளவு சாம்பலாகிற்று. பிறைச் சந்திரனையும், கங்கையையும் தலையில் வைத்திருப்பவரே!

எனது அஞ்ஞான இருளைப் போக்கி குருடாய் இருந்த எனக்கு பார்வையளித்து என்னைக் காத்தவரே! நீரே அனைத்துக்கும் முதலான பரம் பொருள் என பக்திப் பரவசத்தோடு இறைவனை வணங்கினார்.

சங்கரனும் மனம் மகிழ்ந்து 'இன்று முதல் மங்களாயன தீர்த்தம், 'மார்கண்டேய தீர்த்தம்' என அழைக்கப்படும். உன்னால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கத்தில் யாம் எப்போதும் இருந்து எம்மை வணங்குவோருக்கு வேண்டும் வரங்களை அளிப்போம் என ஆசீர்வதித்து மறைந்தார். மார்கண்டேயரும் ஸதாசிவனின் பெருமைகளைப் பாடி அவரை ஆராதித்தார்.

## அத்யாயம் - 27

## ஜபாலா

முன்னொரு காலத்தில், திருக்காளத்திக்கு அருகே நந்திக் குன்றின் அடிவாரத்தில், 'நந்தி' என்னும் அந்தணன் வீர சைவத்தை தீவிரமாகத் தழுவி வாழ்ந்து வந்தான். 'ஜபாலா' என்பது அவனது இல்லாள் பெயர். இருவரும் சிவபெருமான் மீது ஆழ்ந்த பக்தி கொண்டவர்களாயும், ருத்ராக்ஷ மணிந்தவர்களாயும் எப்போதும் காணப்பட்டனர். மற்ற கடவுளர்களை வழிபடுவோரை வெறுத்தும், தவிர்த்தும் வாழ்ந்து வந்தனர். வயது முதிர்ந்து மரணப்படுக்கையில் விழுந்த நந்தி தன் மனைவியை அழைத்து, 'சிறந்த சிவ பக்தி கொண்டவளே! நான் இறந்த பின்னர், நீ என்னுடன் உடன் கட்டை ஏறுவதைத் தவிர்த்து இவ்வுலகில் வாழும் காலம் வரை நீ சிவனடியார்களை வணங்கியும், ஸேவைகள் செய்தும், தொழுதும் வருவாயாக!' என்று அறிவுரை செய்து தனது கடைசி மூச்சினை விட்டான்.

துக்கத்தால் பாதிக்கப்பட்ட ஜபாலா தன் கணவனது கடைசி கார்யங்களை சாஸ்த்ரோக்தமாக செய்து முடித்த பின்னர் அவனது அறிவுரைப்படி தீவிர வீர சைவத்தை பின்பற்றி வாழ்ந்தாள். தொலைவிலுள்ள 'கூர்ம தீர்த்தத்தில்' நீராடி, திருநீறு பூசிக் கொண்டு, ருத்ராக்ஷம் அணிந்து கொண்டு சிவபூஜையில் ஈடுபடுவாள். சிவனடியார்களுக்கு உணவும், ஆடைகளும் அளித்து ஸேவைகள் பல புரிந்து வந்தாள். கார்த்திகை மாதம், கார்த்திகை நக்ஷத்ரத்தில்,

கார்த்திகேயனை நினைத்து வணங்கி பூஜித்து உண்ணாவ்ரதம் இருந்தாள்.

அடுத்த நாள் கூர்ம தீர்த்தத்தில் நீராடி தன் குடிலுக்கு திரும்பும் வழியில் கைகளில் வில்லோடும், அம்போடும் சிறிது தொலைவில் நின்று கொண்டிருக்கும் அழகிய வேடனைக் கண்டாள். அவன் நெற்றியில் திருநீறும், புனித பாசியும் அணிந்திருக்கக் கண்டு அவனைத் தன் குடிலுக்கு உணவருந்த வருமாறு அழைப்பு விடுத்தாள். தெய்வீக காந்தியுடன் விளங்கிய அவனும் சம்மதிக்க அவனது கை, கால்களை சுத்தம் செய்து அன்புடன் உணவு படைத்தாள். இதனால் மனம் மகிழ்ந்த அவன் தன் வேற்று உருவத்தை துறந்து தன் உண்மை வடிவமான 'சிவகுமாரன், ஸுப்ரம்மண்யனாக' அவளுக்கு காட்சியளித்து, அவள் விரும்பியவண்ணம் அவளது குடிலுக்கு அருகிலேயே 'ஜபால தீர்த்தம்' என்ற குளத்தை தன் சக்தி வேல் கொண்டு உருவாக்கி அவளை ஆசீர்வதித்தான். களிப்படைந்த அவள் சிவனடியார் ஸேவையை தொடர்ந்து செய்து வந்தாள்.

அவளது தீவிர பக்தியை சோதிக்க விரும்பிய சிவபெருமான் சிவனடியார் வேடம் பூண்டு அவள் அளிக்கும் விருந்திற்காக அமர்ந்து கொண்டிருந்தார். அவள் பாயசம் பரிமாறிய போது அதன் சூட்டினை பொறுக்க முடியாதவர் போல் 'நாராயண நாராயண' என்று உரக்கக் கூவினார். இதனைக் கேட்டு கோபத்தின் எல்லைக்குச் சென்ற அவள் கையில் வைத்திருந்த கரண்டியாலேயே அவர் தலையில் ஓங்கி அடித்தாள். இந்த அடியினைத் தாங்க முடியாமல் அவரது தலையானது ஐந்து பாகங்களாக பிளந்து குருதி வெள்ளத்தில் கிடந்தது. அடியார் இருந்த இடத்தில் சிவலிங்கம் காணப்பட்டு மேற்பாகம் மட்டும் சிதறி ஐந்து பாகங்களாக இருந்தது. ஒன்றும் புரியாமல், திகைத்து நின்ற ஜபாலாவிற்கு, பரமேஸ்ரன், பார்வதி ஸமேதராய், தேவர்களுடனும், சிவகணங்களுடனும் ரிஷப வாஹனத்தில் லிங்கத்தினின்று வெளிப்பட்டார். பக்தியால், பரம் பொருளை ஆட்கொண்ட வயது முதிர்ந்த அம்மாதிடம் 'பக்தையே! இன்று முதல் இந்த லிங்கம் 'உத்தாரகேஸ்வர' என்னும் நாமம் கொண்டு விளங்கும். இங்கு யாம் எப்போதும் உறைந்து நின்று எம்மை வழிபடுவோருக்கு வேண்டும் வரங்களை அளிப்போம். சித்ரை மாதத்தில் பௌர்ணமி கழிந்த பதினான்காம் நாள் எமக்கு சால உகந்தது. நீ கைலாயத்தில் எம் திருவடியைச் சேரும் காலம் வந்துவிட்டது. அங்கு

எப்போதும் உனது கணவனுடன் சேர்ந்து வாழ்வாயாக!' என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார். அவர் உரைப்படியே ஜபாலாவின் பூதவுடல் இம்மண்ணினை விட்டு நீங்கி விண்ணுலகை அடைந்தது.

(இந்த ஜபாலா தீர்த்தமும், உத்தாரகேஸ்வர லிங்கமும், திருக்காளத்திக்கு மேற்கில் பத்து மைல் தொலைவில் 'வ்யாஸ ஆச்ரமம்' என்ற இடத்தில் காணப்படுகின்றது.)

## அத்யாயம் - 28
# ம்ருத்யுஞ்ஜயன்

முன்னொரு காலத்தில் ஹிமயமலை அடிவாரத்தில் கௌசிகி நதிக்கரையில் 'தர்மப்ரஜா' என்னும் நாட்டை 'ம்ருத்யுஞ்ஜயன்' என்னும் அரசன் ஆண்டு வந்தான். சிறந்த சிவபக்தனான அவன் நல்ல முறையில் நாட்டை ஆண்டு வந்தான். ஒரு நாள் 'ரைக்வ' என்னும் மாமுனிவர் பசி தாளாது அரசன் விருந்து படைப்பான் என்று எதிர்பார்த்து அரச மாளிகை முன் காத்துக் கொண்டிருந்தார்.

துரத்ருஷ்ட வசமாக முனிவரின் வருகையை அறியாத அரசன் உணவு உட்கொண்டு பின் நித்ரையில் ஆழ்ந்தான். அதிக காலம் அரசனின் வருகைக்காக காத்திருந்த முனிவர், வாயில் காப்போனிடம் தனது வருகையை தெரிவிக்குமாறு கூறினார். அதன்படி உள்ளே சென்று அவன் அரசன் உறங்கி கொண்டிருக்கக் கண்டு சிறிது நேரம் கவனித்துக் கொண்டிருந்தான். நித்ரையில் அரசனது உடல் சிறிது அசையக் கண்டு மெல்ல முனியின் வருகையை தெரிவித்தான். தன்னை தொந்தரவு செய்தமைக்காக அரசன் வாயிற்காப்போனை கடிந்து கொண்டு எதனைப் பற்றியும் ஆராயாமல் அம்முனிவரை வெளியேற்றுமாறு ஆணையிட்டான். இதனால் 'இருதலைக் கொள்ளி எறும்பாக' தவித்த அவன், அரசனிடம் சேவகம் புரிவது வாளின் முனையில் நிற்பதற்குச் சமம் என நினைத்து நடந்தவை அனைத்தையும் முனிவருக்குத் தெரிவித்து, வேறு எங்காவது உணவை பெற்றுக் கொள்ளுமாறு கூறினான். வெகுண்டு எழுந்த முனிவர் தம் கடமையிலிருந்து தவறிய உம் அரசன் ஆட்சியிழந்தும், தன் சுற்றத்தை இழந்தும், உண்ண உணவின்றியும், காட்டில் இங்கும் அங்குமாக

பன்னிரெண்டு வருடங்கள் அலைந்து திரிவானாக! என்று சபித்தார்.

உறக்கத்திலிருந்து விழித்தெழுந்த அரசன் நடந்தவற்றை எல்லாம் அறிந்து மனம் வருந்தி, தன் சாப விமோசனத்திற்கு வழி ஏதேனும் உளதா ? என தன் புரோஹிதரிடம் கேட்டுக் கொண்டான். ''கஹனா கர்மணோ கதி:'' என்னும் கூற்றுப்படி, பாபத்தின் பலனை அனுபவித்தே ஆக வேண்டும் என்றுகூறினார். அச்சமயம் தூதன் ஒருவன் அண்டை நாட்டார் படை எடுத்து வந்து கொண்டிருப்பதை அறிவிக்க, அரசனும் ஒரு ஏழை போல் வேடம் தரித்து, தன் மனைவி பானுமதியையும், மகன் ஸுதாமனையும் பத்ரமான இடத்திற்கு புரோஹிதருடன் அனுப்பி வைத்தான். துக்கத்தால் தவித்த அவன், அன்ன ஆஹாரம் இன்றி, காட்டில் அலைந்து கொண்டிருந்தான். இவ்வாறாக பதினொரு வருடங்கள், எட்டு மாதங்கள் கழிந்தன.

கடைசியில் எலும்புக்கூடாக உருமாறிப் போன அவன் காவிரி நதி தீரத்தை அடைந்து அங்கு மார்கண்டேய முனிவரின் ஆச்ரமத்தை கண்டான். காவிரி ஆற்றின் எழிலைக் கண்டும், அதன் வனப்பைக் கண்டும் அவன் மனம் குதூஹலித்தது. நதியினால் ஆச்ரமத்திற்கு பெருமையா ? ஆச்ரமத்தால் நதிக்கு பெருமையா ? என்ற ஸந்தேஹம் கூட அவனுள் எழுந்தது. முனிவர் பெருமானின் பாதாரவிந்தங்களில் ஸாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி அமைதியாக அவர் முன் நின்று கொண்டிருந்தான். அவனது சோகக் கதையை முனிவர் தம் ஞான த்ருஷ்டியால் உணர்ந்து கொண்டார். நீ விரைவில் சாப விமோசனம் அடையும் காலம் நெருங்கிவிட்டது. மீண்டும் அரசாட்சியினையும், மனைவி, மக்கள், சுற்றத்தாரும் கிடைக்கப் பெறுவாய். புனிதத்திலும் புனிதமான தக்ஷிண கைலாயத்திற்குச் சென்று திருக்காளத்தீஸ்வரரை நூறு நாமங்களால் ஜபித்து வழிபடுவாயாக. இந்த 'சத நாமாப்ஜ மாலிகா' என்னும் பாமாலையானது யோகி ஸானந்தரால் யமனுக்கு அளிக்கப்பட்டது. அவர் அதை எமக்கு அளிக்க, நான் அதை உனக்களிக்கிறேன். இறைவனுக்கு ஸமர்பிக்கும் இப்பாமாலையானது நமது பாபங்கள் அனைத்தையும் போக்க வல்லது. சிறந்த மேன்மையையும், மகிழ்ச்சியையும் அளிக்க வல்லது. ப்ரதோஷ காலங்களில் இப்பாமாலையினை சிவபெருமானுக்கு ஸமர்பிப்பது பெரும் பலன்களை தரக்கூடியது என உரைத்து அவனுக்கு முனிவர் அருள் செய்தார்.

அதன்படி ம்ருத்யுஞ்ஜயனும் தக்ஷிண கைலாயத்தை அடைந்து, தூய நதியான ஸ்வர்ணமுகியில் நீராடி திருக்காளத்தீஸ்வரரை பில்வ இலைகளை கொண்டு அர்சித்து வணங்கினான். இந்த லிங்கத்திற்கு அருகிலேயே மேற்கு நோக்கியவாறு ஒரு லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து நிதமும் நூறு நாமங்களைக் கொண்டு ஜபித்து வழிபட்டு வந்தான். ஞான ஒளி பெறுவதற்காக பல தீபங்களை ஏற்றி வணங்கினான். தெய்வீக ஞானத்தை பெற வேண்டி பசுவின் பால் கொண்டு லிங்கத்திற்கு அபிஷேகம் செய்து, பில்வ இலைகளாலும், பலவகைப் பூக்களாலும் பல நாட்கள் பூஜை செய்து வந்தான்.

நான்கு மாதங்கள் கழிந்த பின்னர் திருக்காளத்தீஸ்வரர் அரசன் முன் தோன்றி ஒரு வாளினையும், பகைவர்களை வெல்வதற்கு வேண்டிய ஆற்றலையும் கொடுத்து அருளினார். கார்த்திகை மாதம், பௌர்ணமி நன்னாளில் இந்த லிங்கத்தை வழிபடுவோருக்கு அவர்தம் தேவைகள் பூர்த்தி செய்யப்பட்டு இறைவனடி சேருவர் என்பது திண்ணம். ஆசிர்வதிக்கப்பட்ட அரசன் தன் நாட்டை அடைந்து, பகைவரை ஒழித்து மீண்டும் ஆட்சியை கைப்பற்றினான். மனைவி, மக்கள் மற்றும் சுற்றத்தாருடன் இணைந்து பல்லாண்டு காலம் ஆட்சி செய்து, இறுதியில் சிவபெருமானது திருவடி சேர்ந்தான்.

(பஞ்சம் ஏற்படும் காலங்களில், இந்த ம்ருத்யுஞ்ஜய லிங்கத்தின் கோவில் வாயிலை தற்காலிகமாக சுவர் கொண்டு அடைத்து, ஆற்றின் நீரைக் கொண்டு லிங்கம் மூழ்கும் வரையில் நீர் நிரப்பினால் எங்கும் ஸுபிக்ஷ மழை கிடைக்கப் பெறுவோம் என்பது உறுதி.)

## அத்யாயம் - 29

# ஸாரங்கனும் விஸ்வமோஹினியும்

பல காலங்களுக்கு முன், கோதாவரி நதிக்கரையில் உள்ள 'விப்ரகூடம்' என்னும் அந்தண நகை வியாபாரி வாழ்ந்து வந்து ஐம்பது லட்சம் சவரன்களை சேர்த்து வைத்துக் கொண்டதோடு அல்லாமல் பல நற் செயல்களிலும் ஈடுபட்டு வந்தான். அவன் இறந்த

பிறகு, அவனது ஒரே வாரிசான ஸாரங்கன் செல்வச் செருக்கால் தவறான செயல்களில் ஈடுபட்டும் விலைமாதர்களோடு தொடர்பு கொண்டும், மனம் போனபடி அவனது நேரத்தையும், செல்வத்தையும் செலவழித்து வந்தான். விப்ரகூடத்தில் வசிக்கும் சில க்ராம வாசிகள் தீர்த்த யாத்ரைக்குப் போகலானார்கள். அநேக இடங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டு திருக்காளத்தியை அடைந்தனர். அப்போது அவ்வூர் அரசனான 'சிம்மத்வஜனால்', திருக்காளத்தீஸ்வரருக்கு வசந்தோத்ஸவத்திற்கான விழாக்கள் கோலாகலமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. கோயில், தீபங்களால் அலங்கரிக்கப்பட்டு கண்ணைக் கூசும் வண்ணம் அமைந்திருந்தன. சிறந்த ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட திருக்காளத்தீஸ்வரரையும், திருஞானப்ரஸூனாம்பிகையின் அழகைப் பற்றியும் வர்ணிக்க ஒரு நா போதாது. அவ்விடத்திற்கு பல கலைஞர்கள் வருகை தந்து தத்தம் திறமைகளால் மக்களை மகிழ்வித்துக் கொண்டிருந்தனர். 'விஸ்வ மோஹினி' என்ற நாட்ய மாமணியின் சிறந்த நடனத்தை கண்ணுற்ற க்ராம வாசிகள் அதிர்ந்து போயினர். வாய் திறவாது பார்வையாளர்கள் அத்தனை பேரும் மெய் மறந்து நடனத்தை ரசித்துக் கொண்டிருந்தனர். க்ராமவாசிகள் அவளைப் பற்றி அவ்வூரில் உள்ளோரிடம் விசாரித்த போது, அவளது நடனத்திற்கான விலை நூறு பொற்காசுகள் ஆகும் என தெரிவித்தனர்.

அவர்கள் பின்னர் தம் க்ராமத்தை அடைந்து தீர்த்த யாத்ரையினை குறித்து ஸாரங்கனிடம் விவரித்த போது, அந்த நடன மாதின்பால் அவன் மனம் நாடியது. உடனே அவன் தன் மனைவி, மக்களை விட்டு நீங்கி, அதிக செல்வத்துடன் திருக்காளத்திக்குச் சென்று அந்நாட்யக்காரியின் இல்லத்திற்கு அருகிலேயே ஒரு வீடு பார்த்துக் கொண்டு, தன் மனம் கவர்ந்தவளை இல்லத்திற்கு வருமாறு அழைப்பு விடுத்தான். அவளும் அதற்கு ஒப்புக் கொண்டு நிதமும் அவன் இல்லத்திற்குச் சென்று, அவனை மகிழ்வித்து, காம சாஸ்த்ரப்படி அவனுடன் சேர்ந்து நூறு பொற்காசுகள் பெற்றுக் கொண்டு, வரலானாள். செல்வம் இருந்த வரையில் இம்மண்ணே அவனுக்கு ஸ்வர்கமாக மாறிப் போனது. காசு கரைந்து வெறும் ஆளாக நின்ற அவனை பச்சாதாபமின்றி விரட்டி அடித்தாள் விஸ்வ மோஹினி. ஏமாற்றம் அடைந்த அவன் அழுது கொண்டே தன் இல்லத்திற்கு திரும்பினான்.

சில நாட்கள் கழிந்த பின்னர், அவள், அவன் இல்லத்திற்கு வந்து, 'இந்த உலகம் முழுவதும் செல்வத்தினாலேயே சுழல்கிறது என்பதை அறியாத மடையனே! தீய நடத்தை உள்ளவனே, செல்வனாக இருப்பானாயின் அனைவராலும் மதிக்கப்படுவான். பொருளற்ற ஆண்டியை விட்டு அனைவரும் நீங்குவர். எலும்பு, தசை, தோலினாலான நம் உடம்பு, உமிழ் நீரையும், வியர்வையையும் வெளிவிடுகின்றது. அவற்றை நாம் வாசனை த்ரவ்யங்களைப் பூசிக் கொண்டு மறைக்கின்றோம். இங்ஙனம் அந்தணர் குலத்தில் பிறந்த நீ, ஒரு மாம்ஸ பிண்டத்தை தேடி அலைவதை விடுத்து நற்கார்யங்களில் ஈடுபடு. மரணம் என்பது, எப்போதும் ஒரு மூலையில் நின்று கொண்டு, நமக்காக காத்துக் கொண்டிருக்கின்றது. அதற்குள் அழகிய மாதர்களின் மீதுள்ள உமது கவனத்தை, சங்கரனிடம் திருப்பு. இப்போதே இறைவனை சரணமடைந்து, முக்தி பெறுவதற்கான வழியில் ஈடுபடு என்று கூறினாள்.

அவளது அறிவுரைகளினால், அவனது ஊனக் கண்கள் திறக்கப்பட்டு மனம் தெளிவடைந்து, ஞானம் பெற்றவனானதை உணர்ந்தான். அவளைத் தன் தாயாக, குருவாக நினைத்து, ஸாஷ்டாங்கமாக அவளது கால்களில் விழுந்து வணங்கினான்.

பின்னர் அவன் ஸ்வர்ணமுகி நதியினில் நீராடி, தன் பாபங்களைக் கழுவி, தூய்மை பெற்ற நிலையில், சில வேத பண்டிதர்களை அணுகி, தன் கதையைக் கூறி தனக்கு மறு வாழ்வு அளிக்குமாறு வேண்டிக் கொண்டான். அவர்களுள் பெரியவரான 'கைலாஸநாதர்' என்பவர் அவனைத் தன் சீடனாக ஏற்றுக் கொண்டு உன்னதமான பஞ்சாக்ஷரி மந்திரத்தை அவனுக்கு உபதேசித்தார். தக்ஷிண கைலாயத்தின் சிகரத்தில் 'கைலாஸநாத லிங்கம்' என்னும் லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து, பத்தாயிரம் முறைகள் மந்திரத்தை ஜபித்து, பக்தியுடன் நான்கு ஆண்டுகள் வழிபட்டு வரலானான். வைகாசி மாதத்தில், அமாவாசையன்று இறைவன் லிங்கத்திலிருந்து எழுந்து அவனுக்கு காட்சியளித்து, அவனது பாபங்கள் அனைத்தையும் போக்கி அப்போதே அவனுக்கு முக்தியளித்தார்.

அத்யாயம் - 30

## வரகுண பாண்டியன்

முன்னொரு சமயம் மதுரை நகரை சந்திர வம்சத்தை சார்ந்த 'வரகுண பாண்டியன்' என்னும் வீரத்தில் சிறந்த மன்னன் ஆண்டு வந்தான். தெய்வீக அருளால் 'பிப்பலாதர்' என்னும் முனிவர் அவனது அரண்மனைக்கு விஜயம் செய்தார். அவரை வணங்கி, வரவேற்ற அரசன் தனக்கு ஞானத்தை போதிக்குமாறு வேண்டினான். அதற்கு முனிவரும், 'ஞானம் பெற விழையும் நீ மஹாதேவ பூஜையினை செய்யத்தவறிவிட்டாய். ஹரியும், ஹரனும் ஒருவர்தாம் என்பதை நீ உணர்ந்து கொண்டால் மோக்ஷம் கிடைக்கப் பெறுவாய். ஒன்றிலிருந்து மற்றொன்று வேறுபட்டதல்ல. சக்திக்கும் அதனைக் கொண்டவனுக்கும் வேறுபாடு ஒன்றுமில்லை. ஆயினும் நடைமுறையில் மாயையின் காரணமாக இரண்டிற்கும் இடையில் சில வேறுபாடுகள் உள்ளன போல் தோன்றுகிறது. சிவனுக்கும், கேசவனுக்கும் இடையில் வேறுபாடு ஒன்றுமில்லை. சிவனே திருமால், திருமாலே சிவனாக விளங்குகிறார். இவ்விரண்டு நாமங்களும் ஒன்றுக்கொன்று சார்ந்தவைகளாக காணப்படுகின்றன. சிவனே அனைத்து அண்ட சராசரமாயும், திருமால் அதற்கு ஆத்மாவாகவும் விளங்குகின்றார். நமது புராணங்கள் சிவனை ஒரு தனி இடத்தில் வைத்து பெருமையாகவும், திருமாலை மற்றொரு இடத்தில் வைத்துப் புகழ்ந்தும் பேசுகின்றன. ஆதலால் நாம் ஒருவர், மற்றொருவரை விட உயர்ந்தவர் என்னும் முடிவில் நிலைத்து நிற்கக் கூடாது. இருவரும் ஒருவரே என்று அறியும் போது பெறப்படும் ஞானத்தின் காரணமாக மோக்ஷம் என்னும் உன்னத நிலையை ஒருவன் அடையலாம்'.

இவ்வாறு மன்னனுக்கு, விவரித்த முனிவர் பஞ்சதசாக்ஷரி மந்திரத்தை அவனுக்கு உபதேசித்து நிதமும் ஜபம் செய்து வழிபடுமாறு அருள் செய்தார். ஜபம் செய்ததன் பலனாக அவன் 'சங்கர நாராயணரின்' திருவுருவத்தை தன் கனவுகளில் காண முடிந்தது.

சிறிது காலம் இவ்வாறு கழிந்த பின்னர் புத்த பிக்ஷுக்களின் தொடர்பு அவனுக்கு ஏற்பட்டு அவர்களது போதனையின்பால் மன்னனின் மனம் ஈர்ந்தது. அவர்களது

சேர்க்கையினால் மனம் மகிழ்ந்த அவன் தன் விருப்பம் போல் செல்வத்தை செலவிடலானான். பிப்பலாத முனிவரின் உபதேச மந்திரத்தை தவிர்த்து, மறந்து, அவன் புத்த மதத்தினைத் தழுவலானான். விரைவில் அவர்கள் மன்னனின் அத்தனை செல்வத்தினையும் அபஹரித்துக் கொண்டு, அவனை வீழ்ச்சியடையச் செய்தனர். பதினைந்து எழுத்துக்கள் கொண்ட குரு உபதேசித்த மந்திரத்தை விடுத்த மன்னன் ஆண்டியாகி தன் புலன்களை அடக்கும் ஆற்றல் அற்றவனாய் பித்துப் பிடித்தவன் போல் வாடினான்.

மூன்று வருடங்கள் இவ்வாறு கழிந்த பின்னர், நாரத முனிவர், அரசனுக்கு தர்சனம் அளிக்க, அவனும் மிகுந்த பணிவோடு அவரை வணங்கி மௌனமாக அவர் முன் நின்றான். 'உனது இந்த துயர நிலைக்குக் காரணம் நீ குருவினது உபதேச மந்திரத்தை தவிர்த்ததே ஆகும். நல்ல குலத்தில் பிறந்திருந்தும், ஸகல சாஸ்த்ரங்களை கற்றறிந்தவனாய் இருந்தும், பெரியோரை மதிப்பவனாய் இருந்தும் கூட குருவினது உபதேசத்தை நிராகரித்து விட்டாய். அதனால் உண்டான விளைவினை நீ இப்போது அனுபவிக்கிறாய். அனைத்துலகிலும் மிகப் புனிதமானது தக்ஷிண கைலாயம் தான். நீ அத்தலத்திற்குச் சென்று அங்கு தவழ்ந்தோடும் ஸ்வர்ணமுகியில் நீராடி, அங்கு கொலுவிருக்கின்ற வாயுலிங்கத்தை வழிபடுவாயாக. தம் பக்தர்களுக்கு வேண்டுவனவற்றை எல்லாம் அளிக்கக் கூடிய இறைவன் உனது பாபங்களைக் கழுவி உன்னை உயர்வடையச் செய்வார். உனது குருவும், பரமசிவனும் ஒருவரே என நினைத்து, மந்திரத்தை ஜபித்தும் த்யானம் செய்தும் வந்தால் உனது மனச் சுமை குறைந்து முக்தியடையப் பெறுவாய்! என்று நாரத முனிவர் அவனுக்கு அறிவுரை செய்து ஆசீர்வதித்தார்.

அவர்தம் சொற்படியே தக்ஷிண கைலையை அடைந்த மன்னன் ஸ்வர்ணமுகி நதியினில் நீராடிய மறுகணமே தன்னிலை உணர்ந்தவனானான். வாயுலிங்கத்திற்கு அருகிலேயே ஒரு லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து, உறுதியாகத் த்யானம் செய்து வரலானான். இங்ஙனம் எட்டு வருடங்கள் வழிபாட்டில் கழிந்த பின்னர் அவன் மீது கருணை கொண்ட திருக்காளத்தீஸ்வரர் நந்தி வாஹனத்தில் அமர்ந்து கொண்டு, பல தேவர்கள் புடை சூழ, மாசி மாதம் மூன்றாம் நாள் வரகுண பாண்டிய மன்னனுக்குக் காட்சியளித்தார். ஆனந்தத்தின் எல்லையினைத் தொட்டுவிட்ட அவனும் பக்திப் பரவசத்தால்

இறைவனுக்கு பாமாலைகள் பல தொடுத்தான். தனது கனவுகளில் சிவபெருமான் தினமும் காட்சியளிக்க வேண்டும் எனவும், 'திருக்காளத்தி' என்று அவ்வூருக்கு தன் பெயரையே சூட்ட வேண்டும் என்றும் அவன் வேண்டிக் கொள்ள, பரமேஸ்வரனும் மனம் உவந்து அவன் விரும்பிய வரங்களை அவனுக்கு அளித்தார். அன்று முதல் 'திருக்காளத்தி' என்னும் புனிதத் தலம் 'வரகுணபுரம்' என்ற புதிய பெயர் கொண்டதாயிற்று. இவ்வாறு சில காலம் இறைவனை ஆராதித்த வரகுண பாண்டிய மன்னன் பரமசிவனின் ரூபம் கொண்டு ஸாரூப்ய முக்தியை அடைந்தான்.

## அத்யாயம் - 31

# அரசன் சக்ரதரன்

'மதுரா' நகரில் வஜ்ர கிரீட மன்னனின் மைந்தனான 'சக்ரதரன்' என்னும் வீரன் நல்லாட்சி புரிந்து வந்தான். நால்வகை ஸேனைகளைக் கொண்டு பெரும் படைபலம் உடையவனாக இருந்தான். ஒரு தந்தை போல் தன் குடிகளிடம் பாசம் மிக்கவனாய் இருந்தான். சிவபக்தி கொண்ட அம்ருதலதா, காந்திமதி என்னும் இரு புதல்விகளைப் பெற்றிருந்தான். சிறிது காலத்திற்குப் பின்னர் சில போலியான வேஷதாரிகளின் தொடர்பு காரணமாக வைணவ மதத்தை தழுவலானான். அவர்களது தூண்டுதலால் மன்னன் மேற்கு நோக்கி படையெடுத்து தோல்வி கண்டான். அத்தனை பெரிய ஸேனைகள் இருந்தும் சிறந்தவீரமும், ஆற்றலும் பொருந்தியவனாக இருந்தும் அவனால் வெற்றிவாகை சூடமுடியவில்லை. அவன் தென் கிழக்கு மலையை அடைந்த போது அகத்திய முனிவரின் ஆச்ரமத்தை காண நேர்ந்தது. ஆச்ரமத்தினுள் நுழையும் போது ஒரு புதுவிதமான அனுபவம் ஏற்பட்டு, மனதில் அமைதி பரவுவதை உணர்ந்தான். முனிவரைக் கண்டு ஸாஷ்டாங்கமாக அவரை வணங்கி 'மாமுனிவரே! ஈடு, இணையில்லா வலிமையும், பெரும் ஸேனைகள் பெற்றிருந்தும் நான் தோல்விக்கு மேல் தோல்வியைக் காண்கின்றேன். அளவற்ற செல்வமும், பிற போகங்கள் உடையவனாக இருந்தும், என்னிடம் மன அமைதி இல்லை. உம்மிடம் நான் அடைக்கலம் புகுகின்றேன். நீரே எனது நண்பன், குரு, வழிகாட்டி ஆவீர்' எனக் கண்ணீர் மல்கக் கதறினான்.

கருணை மனம் கொண்ட முனிவரும் 'ஓ! அரசனே! உனது தோல்விக்கான காரணத்தையும், மன அமைதியின்றி தவிப்பதையும் நான் அறிவேன். நீ நற்குணங்களைக் கொண்டவனாக இருந்தாலும் வேண்டத்தகாதவர்களின் தொடர்பின் காரணமாக, நீ பாபச் செயல்கள் புரிந்து இந்நிலைக்குத் தள்ளப்பட்டாய். நீ போலிகளின் வார்த்தைகளை மதித்து ஏற்றுக் கொண்டு மஹாதேவ வழிபாட்டினை விடுத்தாய். இன்னமும் கூட நீ வேஷதாரிகளின் சேர்க்கையில் மன மகிழ்ச்சியடைகின்றாய். உலக போக வாழ்க்கையில் ஆர்வம் உள்ளோர் நற்சிந்தனைகளை எதிர்ப்பவர்கள். மேலும் அவர்கள் அனைத்து உலகங்களின் தலைவனாகிய பரமேஸ்வரனுக்கு எதிரியாகக் கருதப்படுவார்கள். தற்பெருமையும், ஆணவமும் கொண்ட அவர்கள் திருமாலிடம் பற்று உள்ளவர் போல் நடிக்கும் வேஷதாரிகள். சிவபெருமானை நீ வெறுக்கும் வரையில், சிவனடியார்களும், வெற்றியும் உன்னைத் தவிர்த்து நீக்குவர். அனைத்து கடவுள்களும், சிவனிடத்திலேயே உறைவதால், அவரை வழிபட்டால் அனைத்து தேவர்களும் ப்ரீதி அடைவர். நீ மஹாதேவனை மறந்ததால் மற்ற தேவர்களும் உனக்கு வேண்டியதை செய்ய இயலாது போயினர் என்று உரைத்தார்.

தனது தவற்றினை உணர்ந்த அரசன் மரணத்திற்குப் பின்னால் மோக்ஷம் அடைய இம்மண்ணில் ஏதேனும் வழி உளதா என வேண்டிக் கொள்ள, முனிவரும், 'திருக்காளத்தீஸ்வர ப்ரபத்தியினை' அவனுக்கு உபதேசிக்கலானார். பதினேழு எழுத்துக்களைக் கொண்ட இந்த மந்திரமானது சிவசக்தியினைக் குறிக்கும். ''ஸ்ரீ காளஹஸ்தீச சரணௌ சரணமஹம் ப்ரபத்யே''. ''நான் திருக்காளத்தீஸ்வரருடைய பாதங்களில் சரணமடைகிறேன் என்பது இந்த மந்திரத்தின் பொருள்''.

முனிவரின் அறிவுரைப்படி அரசன் மந்திரத்தைக் கொண்டு நிதமும் த்யானம் செய்து வர அவனும் தூய்மை பெற்றவனானான். பின்னர் நாடு திரும்பிய அவன் தன் நாட்டினை இன்னமும் விஸ்தாரமாக்கி வெற்றிவாகை சூடி இறைவனது அருளால் 'ராஜசேகரன்' என்னும் பெயர் கொண்ட புதல்வனைப் பெற்றான். தக்க வயதினை அவன் அடைந்ததும் அவனுக்கு முடி சூட்டி ஆட்சிப் பொறுப்பினையும், ஸகல ராஜ போகங்களையும் அவனிடம் ஒப்படைத்து நிறைந்த மனத்தினனாய் திருக்காளத்தியை அடைந்தான். மாசி மாதம், க்ருஷ்ண பக்ஷத்தின் பதினான்காம் நாள் ஸ்வர்ணமுகி

நதியினில் நீராடி கைலாஸகிரி மலையினைச் சுற்றி வாயுலிங்கத்தின் முன் அமர்ந்து கொண்டு இரவு முழுதும் அகத்திய முனிவர் உபதேசித்த மந்திரத்தை த்யானிக்கலானான். இந்நிலையில் அவனது உயிர் பிரிந்து யோகிகளாலும் அடைய முடியாத கைலாயத்தை அடையும் பேற்றினை அடையப் பெற்றான் சக்ரதரன்.

அத்யாயம் - 32

## அரசகுமாரிகளும் யோகிகளும்

அரசன் சக்ரதரனுக்கு அம்ருதலதா, காந்திமதி என்னும் இரு புதல்விகள் இருந்தனர். ஒவ்வொரு கணமும் உலக நாயகனான சிவபெருமானையே நினைத்து வழிபட்டு கன்னிகளாகவே தம் வாழ்க்கையை நடத்தி வந்தனர். இரு அரசகுமாரிகளும் அதிகாலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்த பின்னர் வழிபாட்டிற்கான வேலைகளில் ஈடுபடுவர். இளையவள் பூஜைக்கு வேண்டிய மலர்களை பறித்து வர மூத்தவள் பூஜை அறையினையும், பூஜைக்கான விக்ரஹங்களையும், சாமான்களையும் சுத்தம் செய்வாள். இருவரும் இணைந்து, மண்டபத்தினை மலர்களால் அலங்கரிப்பர். கவனத்தை சிதற விடாது மனதை ஒருநிலைப் படுத்தி சிவன் மற்றும் பார்வதி தேவிக்கு அர்ச்சனை செய்து ஆராதிப்பர். தனியாக தயாரிக்கப்பட்ட உணவு, பழங்கள் முதலானவற்றை இறைவனுக்கு படைத்து பாமாலைகள் ஸமர்பித்து தம் வழிபாட்டினை நிறைவு செய்வர்.

மதியம், தம்மை காணவரும் சிவனடியார்களை மிக மரியாதைகளுடன் வரவேற்று விருந்தளித்து உபசரிப்பர். பல்வேறு சிவக்ஷேத்ரங்களைக் கண்டு தர்சனம் செய்து வந்த அவர்களும் அத்தலங்களின் பெருமைகளையும், சிவபெருமானின் திருவிளையாடல்களையும் ஆவலுடன் செவியுற்று இன்புறுவர். மேலும் பல பக்திப் பாடல்களை கற்று மகிழ்வர்.

மாலையில் பூஜை அறையினை சுத்தம் செய்து மீண்டும் விக்ரஹங்களுக்கு பல வகையான விலை உயர்ந்த வைரக் கற்களாலான ஆபரணங்களை சூட்டி அழகு செய்வர். வீணை, வேணு, ம்ருதங்கம் போன்ற இசைக்கருவிகளுடன் இணைந்து, இறைவனது பெருமைகளை வாயார பாடி மகிழ்வர். இரவில் நல்ல இனிய

கனவுகளை கண்டு களிப்பர்.

ஒரு நாள் காலை அம்ருதலதா தன் தங்கையிடம் 'இரவில் நான் ஒரு நல்ல கனவு கண்டேன். நெற்றியில் திருநீறு பூசி, ருத்ராக்ஷத்தை அணிந்து கொண்ட ஒரு யோகியானவர் திருக்காளத்தி தலத்தினின்று தான் வந்ததாக கூறினார். மஹாதேவனிடத்தில் நாம் கொண்டுள்ள ஆழ்ந்த பக்தியை கேள்விப்பட்டு அங்கு வந்ததாகவும் கூறினார். எனக்கு புனிதமான பஞ்சாக்ஷரி மந்திரத்தையும் போதித்தார். திருக்காளத்தீஸ்வரரது மஹிமைகளைப்பற்றிக் கூறி மறைந்து போனார்' என்று குதூஹலத்துடன் கூறினாள். காந்திமதி தானும் அதே போன்று ஒரு கனவினைக் கண்டதாகக் கூற, இருவரும் உவகையில் திளைத்திருக்க, வாயிலில் அரசகுமாரிகளைக் காண வேண்டி ஒரு யோகி வந்திருப்பதாக பணிப்பெண் அவர்களுக்கு தெரிவித்தாள். அவர்களது முதல் நாள் கனவுகளில் கண்டது போல அதே தோற்றத்துடன் கூடிய யோகி ஒருவர் அவர்கள் முன்னிலையில் இருக்கக் கண்டு இருவரும் ஆச்சர்யமடைந்தனர். அவர்களது விருந்தோம்பலை அங்கீகரித்த யோகி தாம் திருக்காளத்தியிலிருந்து வந்திருப்பதாகவும், வாயுலிங்கத்தின் பெருமைகளை விவரித்து, பஞ்சாக்ஷரி மந்திரத்தை போதித்து நிதமும் அதனைக் கொண்டு த்யானம் செய்யுமாறும் அறிவுறுத்தி, பசி, தாகம் இவை இரண்டினையும் நீக்கக் கூடிய வல்லமை வாய்ந்த விபூதியினை அவர்களுக்கு அளித்து அருள் செய்தார். தனது சீடரான 'ஸத்யம்' என்பவருக்கு, அரசகுமாரிகளை திருக்காளத்திக்கு அழைத்து வருமாறு கூறி தம் வழி சென்றார்.

யோகியினது வார்த்தைப்படி ஸத்யம் என்பவரின் துணையோடு திருக்காளத்தியினை அடைந்து பளிங்கு போல் காணப்படும் ஸ்வர்ணமுகி நதியினில் நீராடி மேன்மையான வாயுலிங்கத்தை பில்வ இலைகளைக் கொண்டு வழிபட்டனர். அருகிலேயே அவர்கள் நாமங்களைக் கொண்ட இரு லிங்கங்களை ப்ரதிஷ்டை செய்து சிவயோகி உபதேசித்த மந்திரங்களைக் கொண்டு த்யானம் செய்து வந்தனர். இங்ஙனம் ஐந்து வருடங்கள் கழிந்த பின்னர் மார்கசீர்ஷ (மார்கழி) மாதத்தில் தங்கள் பூத உடல்களை நீத்து கைலாயத்தினை அடையும் பேறு பெற்றனர்.

## அத்யாயம் - 33

# ராஜேந்திர சோழன்

திருச்சிராப்பள்ளிக்கு மேற்கிலுள்ள தர்மபுரி என்னும் செழிப்பான நகரத்தை அஸ்வரோஹன் என்னும் சோழ அரசன் ஆண்டு வந்தான். சிறந்த சிவபக்தனான அவன் சிறந்த வீரனாகவும், வேத சாஸ்த்ரம் அறிந்தோரை மதித்து நடத்தியும், வாரி வழங்கும் வள்ளலாகவும், வாழ்ந்து வந்தான். இம்மன்னனது அருந்தவப் புதல்வன் ராஜேந்திர சோழன். இவனும் தன் தந்தையைப் போலவே சிறந்த வீரனாகவும், சிவபக்தனாகவும், வள்ளலாகவும் இருந்து மன்னர்களின் சிறந்த வாரிசாக விளங்கி தந்தைக்குப் பின் நல்லாட்சி புரிந்து வந்தான். அவனது நகரில் உறையும் 'ஜவ்வந்திநாதரிடம்' அதிக பக்தியுடையவனாகவும் வாழ்ந்து வந்தான்.

இதே சமயத்தில் காஷ்மீரத்திலுள்ள 'ப்ரம்ம வஜ்ர விதான்' என்னும் ஊரில் சாஸ்த்ரங்களை நன்கு கற்றறிந்த சிவராதன் என்ற பெரிய யோகி வாழ்ந்து வந்தார். அவரது தீவிர பக்தியின் காரணமாக, சிவபெருமானின் கருணைக்குப் பாத்ரமானார். ஒரு முறை அவருக்கு விசித்ரமானதோர் எண்ணம் ஏற்பட்டது. அவர், தம் உடலை இம்மண்ணிலேயே விடுத்து ரகசியமாக ஸ்வர்கத்தை அடைந்து தெய்வீக மணம் வீசும் சிவந்த ஜவ்வந்திச் செடிகளை எடுத்துக் கொண்டு வந்து மீண்டும் தன் உடலில் புகுந்தார்.

அவர் தர்மபுரி நகரை அடைந்து அங்கு இச்செடிகளை நட்டு அவற்றில் பூக்கும் தெய்வீக நறுமணம் வீசும் ஜவ்வந்தி மலர்களைக் கொண்டு அங்குள்ள லிங்கத்தை பூஜை செய்ததால் அந்த லிங்கம் ஜவ்வந்திநாதர் என்னும் பெயரைப் பெற்றது. சிவராதன் பூஜையினை முடித்த பின், தான் உயிர் வாழ்வதற்காக ஒரு கைப்பிடி அளவு நீரை பருகுவான். ஒரு நாள் அந்தணன், பூஜை செய்யப்பட்ட மலர்களுள் ஒரு ஜவ்வந்தி மலரை அரசனுக்கு அளித்தான். அம்மலரின் நிறத்தாலும், மணத்தாலும் மயங்கிய மன்னன் நிதமும் தனக்கு இம்மலர்களைக் கொண்டு கட்டிய மூன்று மாலைகளை பரிசாக அளிக்க வேண்டும் என பேராசையினால் உத்திரவிட்டான். மூன்று மாலைகளுள் ஒன்றை தன் மூத்த மனைவி சந்திரலேகாவிற்கும், மற்றொன்றை இளையவளான காந்திமதிக்கும், மீதமுள்ளதை

தனக்குமாக வைத்துக் கொண்டான். மன்னனும், இளையவளும் மாலைகளை தாம் அணிந்து அலங்கரித்துக் கொண்டிருக்க மூத்தவள் அதனை அரண்மனையிலுள்ள 'அம்ருதலிங்கத்'திற்குச் சாற்றி வழிபடுவாள். கருணை கொண்ட இறைவனும் இவ்வுலகை ஆளக்கூடிய ஆற்றல் பெற்ற ஒரு ஆண்மகவை அவளுக்குத் தந்து அருளினான்.

பூஜைக்குரிய மலர்கள் இல்லாமையால் சிவராதன் கைப்பிடியளவு நீரையும் தவிர்த்தான். பக்தனின் இந்நிலைக் கண்டு வெகுண்ட, கிழக்கு நோக்கிய வண்ணம் உள்ள ஐவ்வந்திநாதர் திடீரென மேற்கு நோக்கி திரும்பினார். இதனால் மிகப் பயங்கரமான புயல் உருவாக மக்கள் பீதியடைந்து, கலவரப்பட்டு, அங்கும் இங்குமாக அலைந்து திரிந்து மடிந்தனர். மன்னனது ப்ரிய மனைவியான காந்திமதியும் புயலின் கோரத்தால் தன் உயிரை இழந்தாள். ஆனால் பக்தி கொண்டவளான சந்திரலேகா மட்டும் இப்புயலால் பாதிக்கப் படவில்லை. அச்சத்தால் சூழப்பட்ட ராஜேந்திர சோழனும் குதிரை மீதேறி வடபுரம் நோக்கி செல்லலானான். அப்போதும் புயல் அவனை விடாமல் துரத்திச் சென்றது. ரிஷி வித்யா, வ்ருத்தாசலம், சோணாசலம், விரிஞ்சிபுரம், ஸ்ரீவாராஹம், வேதபுரி, காஞ்சிபுரி போன்ற திருத்தலங்களில் உறையும் சிவலிங்கங்களை வழிபட்ட போதும் அப்புயல் அவனை அமைதியுறச் செய்யவில்லை.

தெய்வீகக் கருணையினால் அவன் ஸ்வர்ணமுகி நதியைக் கடந்து, திருக்காளத்தியை அடைந்த போது, புயல், ஆற்றினைக் கடக்க முடியாது, மேற்கு கரையிலேயே புழுதி மழையினை தொடர்ந்து மூன்று நாட்கள் பெய்தது. இப்புனித தலத்தினது மஹிமையை உணர்ந்த மன்னன், அரசாட்சி, குடும்பம் போன்றவற்றின் மீதிருந்த ஆசைகளை நீக்கி, வேத நெறிப்படி திருக்காளத்தீஸ்வரை வழிபடத் தொடங்கினான். தினசரி தேவைக்காக ப்ரம்ம வித்யா தீர்த்தத்தை அவன் உபயோகித்தாலும் முந்தைய நற்செயல்களின் காரணமாகவும், அவன் தூய்மை பெற்றவனானான். இறைவன் ஒரு யோகியாக அவனது கனவில் தோன்றி 'இத்தீவிரமான உறுதியான வழிபாட்டில் ஈடுபடுவதன் காரணம் என்ன' என்று வினவினார். அதற்கு அவனும் தான் இறைவனுடன் ஐக்யமாகக் கூடிய 'சிவ ஸாயுஜ்யத்தை' அடைய

விழைவதாயும் அதற்கான பாதையை தனக்கு காட்டுமாறும் அவரை வேண்டிக் கொண்டார். அவனை சோதனை செய்ய விரும்பிய பரமேஸ்வரன் அனைத்து தேவர்களிடம் உள்ள செல்வத்தை எல்லாம் தன்னால் அவனுக்கு அளிக்க முடியும் என உரைத்தார். அப்பரிசை ஏற்றுக் கொள்ள மறுத்த அரசன், மீண்டும் தான் சிவ ஸாயுஜ்யத்தையே அடைய விரும்புவதாகக் கூறினான். அக்கனவிலேயே யோகி திருக்காளத்தீஸ்வரராக அவனுக்கு காட்சியளித்து அஷ்டாக்ஷரி மந்திரத்தை அவனுக்கு அளித்து த்யானம் செய்யுமாறு கூறி மறைந்தார்.

விழித்து எழுந்த மன்னன் தனது கனவின் சிறப்பினை எண்ணி வியந்து இறைவனது கருணையை எண்ணிப் பூரித்தான். வாயுலிங்கத்திற்கு அருகிலேயே ஒரு லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து நிதமும் இறைவன் உபதேசித்த மந்திரங்களை த்யானம் செய்து வந்தான். கடைசியில் சித்திரை மாதம், சுக்ல பக்ஷத்தின் ஐந்தாம் நாள் திருக்காளத்தீஸ்வரன் மன்னன் முன் தோன்றி அவனுக்கு ஸாயுஜ்ய முக்தியளித்தார்.

அத்யாயம் - 34

## ஸர்வம் சிவமயம்

(சிவனே ஸர்வ வ்யாபியாகத் திகழ்கின்றான்)

இவ்வாறாக பல பக்தர்களின் கதைகளையும், அவர்கள் சிவபெருமான் பால் கொண்டுள்ள அளவற்ற பக்தியினையும், அன்பினையும் தெள்ளத் தெளிவாக தம் சீடரான பாரத்வாஜ முனிவருக்கு எடுத்துரைத்தார் மாமுனி ரோமசர். மேலும் அவர், தம் சீடனை ஒரு லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து அதிக பக்தியோடும், பற்றோடும் வழிபடுமாறும் அறிவுறுத்தினார். மீண்டும் திருக்காளத்தீஸ்வரரைக் குறித்தும், இத்தலத்தின் மகிமையைப் பற்றியும் கைலாஸகிரியினது சிறப்பைக் குறித்தும், ஸ்வர்ணமுகி நதியினது தூய்மையைப் பற்றியும் தம் சீடனித்தில் விவரிக்கலானார். 'நான் பாபிகளைப் பற்றியும், முனிவர்களைப்பற்றியும், அவர்களது மேன்மையான பக்தியினால் அடைந்த மோக்ஷத்தைப் பற்றியும் ஒரு சிறு அளவிலேயே விளக்கியிருக்கிறேன். ஸர்வேச்வரனுடைய அனைத்து மகிமைகளையும் ஒருவரால் தம் ஆயுட்காலத்திற்குள் விவரிக்க முடியாது' என்று செப்பி, திருக்காளத்தீஸ்வரரைக் குறித்து

மௌனமாகத் தியானிக்கத் தொடங்கினார்.

தனது குருவின் வார்த்தைகளைச் சிரமேற்கொண்ட பரத்வாஜர், தன் சீடர்களுடன், ஸ்வர்ணமுகியில் நீராடி, ஆனந்தத்தை நல்கும் வாயுலிங்கத்தை பக்தியோடு தொழுதார். அவர் த்யான நிலையில் ஆழ்ந்திருந்த போது, எத்தகைய இனிமையானது என்று விவரிக்கமுடியாத ஒரு தெய்வீக வசனத்தை அவர் செவியுற்றார். 'ஓ பரத்வாஜரே! இவ்விடத்தின் ஸமீபத்தில், தெற்குப் புறமாக ஜீவன்முக்தி அளிக்கவல்ல சாச்வத க்ஷேத்ரத்தினை அடைந்து, வேதங்களின் பாகமாக இருக்கும் 'ஸ்ரீ ருத்ரத்தை' உச்சரித்து என்னை வழிபடுவாயாக. எமது பக்தர்களின் வழிபாட்டிற்காக அவ்விடத்தில் ஒரு லிங்கமும், தீர்த்தமும் இருக்கின்றது. இத்தகு தெய்வீக வாசகத்தை செவியுற்ற பரத்வாஜர் மெய்சிலிர்த்து தம் சீடர்களுடன், இறைவன் சுட்டிக்காட்டியுள்ள தலத்திற்கு விரைந்தார். அங்குள்ள தூய்மையான தீர்த்தத்தில் நீராடி, அங்கு கொலுவீற்றிருக்கும் லிங்கத்தை வணங்கி ஆராதித்த போது, உடனே 'பரமேஸ்வரன்' அவருக்கு காட்சியளித்தார். பக்திப் பரவசத்தால் நெகிழ்ந்து போன முனியும், 'ஓ! கிரிஜா நாதரே! உம்மை வணங்குகிறேன், ஓ! பரமேஸ்வரரே! உம்மை ப்ரார்த்திக்கிறேன். இந்த அண்ட சராசரத்திற்கும் காரணமான முதலோனே! வேதங்களினால் புகழப்படுவோனே! அனைத்து செயல்களிலும் உறைந்து முழுமுதலாகி நிற்போனே! உமது கருணையினால் நான் ஞானம் பெற்றவனானேன். எனது வணக்கங்களை ஏற்றுக் கொண்டு எமக்கு அருள் செய்வீராக! என கண்ணீர் மல்கக் கூறி உருகி நிற்கலானார்.

அவரது பக்தியால் ஆளப்பட்ட ஈஸ்வரனும், 'லிங்கோத்பவரை' க் குறித்து எடுத்துக் கூறி அவரை ஞானம் பெறச் செய்தார். முனிவரால் வழிபட்ட லிங்கமும், உபயோகிக்கப்பட்ட தீர்த்தமும் இனி அவரது நாமம் கொண்டே விளங்கட்டும்'எனத் திருக்காளத்தீஸ்வரர் அறிவித்து, மேலும் அவ்விடத்தில் இறைவனை வழிபடுபவர்கள் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுவிக்கப்பட்டு மோக்ஷமென்னும் ஸாம்ராஜ்யத்தை அடையப் பெறுவர் என்றும் உரைத்து மறைந்தார். மஹாதேவன் அருளால் பரத்வாஜ முனியின் விருப்பங்கள் அனைத்தும் பூர்த்தியாகி அவர் தன் நிலை உணர்ந்தவராய் மன அமைதி அடைந்தார்.

ரோமச முனிவரும் ஸ்வர்ணமுகி நதியில் நீராடி திருக்காளத்தீஸ்வரரையும், திருஞானப்ரஸூனாம்பிகையையும் தர்சனம் செய்த பின்னர், தெற்குப்புற வாயிலில் தக்ஷிணாமூர்த்தி சிலைக்கு எதிராக முதலில் தர்பை புல்லினை பரப்பி அதன் மீது மான் தோலினை விரித்து, அதன் மீது பத்மாஸன நிலையில் அமர்ந்து, தன் உடல், தலை, கழுத்து ஆகியவற்றை ஒரு நிலைப்படுத்தி, கண்கள் மூக்கின் நுனியையே கூர்ந்து நோக்க, அவர் தம் மனதை அடக்கி, இறைவனைக் குறித்து த்யானிக்கலானார். அவர் மிக உன்னதமான அமைதி நிலை அடையப் பெற்று, 'நிர்விகல்ப ஸமாதியினை' அடைந்தார். இறைவனது ஸ்ருஷ்டிகளில் அனைத்து உயிருள்ள ஜீவன்களிலும், ஜடப் பொருள்களிலும் இறைவன் உறைந்திருப்பதை உணர்ந்தார் முனிவர். அனைத்து இடங்களிலும், ஏன் தம்மிலும் கூட சிவனையே கண்டார். இறுதியாக தான் என்பது வேறு யாருமல்ல. மிக உன்னதமான ஆத்மாவேயாகும் என்பதனை உணர்ந்து கொண்ட அவரது அசைவற்ற நிலையிலுள்ள உதடுகள் 'சிவோஹம்' என உச்சரிப்பது போல் உணர்ந்து அக்கோவில் முழுவதும் சிவோஹத்தினால் ஆக்ரமிக்கப் பட்டது போல் தோன்றியது. முனிவரிடம் இருந்து ஒரு ஜோதி எழும்பி திருக்காளத்தீஸ்வாருடன் ஐக்யமானது.

இக்கதைகளை யார் பக்தியுடன் இறைவன் முன் அமர்ந்து அல்லது பில்வ மரத்தின் அருகில் அமர்ந்து கொண்டு படிக்கின்றனரோ, அவர்கள் ஆரோக்யமும், செல்வ பலமும் பெற்று அறிவாளிகளாகத் திகழ்வார்கள். இவ்வுலக வாழ்க்கையினை துறக்கும் போதுமோக்ஷத்தை அடைவார்கள் என்பது திண்ணம்.

(பரத்வாஜ முனிவரால் வழிபட்ட லிங்கமும், தீர்த்தமும் 'லோபாவி' என்னும் இடத்தில் காணப்படுகின்றது. ரோமச முனிவரது ஸமாதி திருக்காளத்தி கோவிலின் வெண்கல வாசற்படியில் உள்ளது.)

அத்யாயம் - 35

# நக்கீரர்

சங்க காலத்தில் பாண்டிய அரசாட்சி மிக உன்னதமான நிலையில் இருந்தது. அதன் தலை நகரில் கலைகளும், ஓவியக் கலையும், பாட்டும், நடனமும், தழைத்து ஓங்கின. அரசனால் தமிழ் இலக்கியங்கள் ஆதரிக்கப்பட்டன. சிறந்த புலவர்கள் கொலுவீற்றிருந்து தமிழ் இலக்கியத்தை மேன்மையுறச் செய்தனர். அவர்களிலே மிகச் சிறந்தவரான நக்கீரர் எதையும் கூர்ந்து நோக்கி ஆராய்ந்து அறியும் திறம் படைத்தவர். புதிய புலவர்களின் புலமைகளை நன்கு உணர்ந்து அரசனிடம் இருந்து பரிசுகள் பெறச் செய்வார்.

அந்நகரிலே வாழ்ந்து வந்த தர்மி என்னும் ஏழ்மையில் உழலும் ப்ரம்மசாரி அர்ச்சகன், ஸுந்தரேச கடவுளிடம் பெரும் பக்தி கொண்டவனாக இருந்தான். அவன் திருமணம் செய்து கொள்ள பணம் தேவையாக இருந்தது. தனக்கு ஒரு சிறந்த கவிதை இயற்றிக் கொடுக்குமாறும், அதனை அரசனுக்கு அளித்து பொற்காசுகள் பெற வேண்டும் என தன் இஷ்ட தெய்வமான ஸுந்தரேச பெருமானிடம் வேண்டிக் கொள்ள அவரும் மனமிரங்கி அவனுக்காக இரண்டு வரிகள் அடங்கிய கவிதையை அளித்தார். மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்ட அவனும் அதனை அரசவையில் ஸமர்பித்தான். கவிதையை வாசித்த நக்கீரர் உரக்க நகைத்து 'தர்மி என்னும் பெயர் கொண்ட அர்ச்சகரே! எங்கேனும் மாதர் தம் பூங்குழல் இயற்கையான நறுமணம் கொண்டதாக இருக்குமா? இருக்கவே முடியாது. மங்கையர்கள் தம் கூந்தலை வாசனைத் த்ரவ்யங்கள் மற்றும் மலர்கள் கொண்டு அலங்கரிப்பதன் காரணமாகவே கூந்தல் நறுமணம் வீசுவது போல் தோன்றுகிறது' என எள்ளி நகையாட, அங்கு குழுமியிருந்த மற்ற புலவர்களுக்கெல்லாம் தர்மி காட்சிப் பொருளாகி நிற்க, அவமானத்தால் குன்றிப் போய் மனக்கசப்புடன் ஆலயத்திற்குத் திரும்பினான்.

ஏமாற்றம் அடைந்த அவன் இறைவனின் பிழையுள்ள கவிதையால் தான் அரசவையில் அனைவரின் கேலிக்கு உள்ளானதை கண்ணீரும், கம்பலையுமாக இறைவனிடம் முறையிட்டான். 'ஓ

ஸுந்தரேச! நீரே எனக்கு நேரடியான தண்டனையை கொடுத்திருக்கலாம். அதை விடுத்து கற்றோர் பலர் முன் என்னைத் தலை குனியச் செய்தீர். இது ஏன் ? என்று இறைவனிடம் கண்ணீர் மல்கக் கதறினான். தான் இயற்றிய கவிதை பிழையற்றது என்பதை நிரூபிப்பதற்காக ஸுந்தரேசர் அந்தண வேடம் பூண்டு தன் பக்தனோடு அரசவையை அடைந்தார். தன் கவிதையில் காணும் பிழை என்னவென்று நக்கீரரை வினவ, அவரும் உன் கவிதை சொற் குற்றமற்றது. ஆயினும் பொருட் குற்றம் கொண்டது என பதிலளித்து, அதற்கான காரணத்தையும் விளக்கினார். கோபம் கொண்ட அந்தண வடிவிலுள்ள கடவுள் அனைத்துலகினை ரக்ஷிக்கும் மஹாதேவனின் சரி பாதியாக நிற்கும் அன்னை மீனாக்ஷியின் சந்தனக் குழல் கூட இயற்கையான நறுமணமற்றதா எனக் கேட்டார். அதற்கு ஆம் என்று நக்கீரர் உரைக்க அந்தணனது கோபம் எல்லையைக் கடந்து, தனது உண்மையான வடிவினை புலவருக்குக் காட்ட , அவரும் இறைவனான முக்கண்ணன் தனது மூன்றாவது கண்ணை திறப்பானாயின், தான் கைப்பிடி அளவு சாம்பலாகிப் போவோம் என்று உணர்ந்த பின்னும் 'சிவன் சொன்னாலும் குற்றம் குற்றமே' எனத் தெள்ளத் தெளிவாக அச்சமின்றி எடுத்துக் கூறினார். புலமை செருக்கால் தலை நிமிர்ந்து நிற்கும் புலவருக்கு தொழு நோய் பிடிக்குமாறு இறைவன் சபித்தார். தம் செய்கையை எண்ணி வருந்திய அவர் தன்னை மன்னிக்குமாறு பரமேஸ்வரனது தாள் பணிய, கருணாமூர்த்தியானவர் வட திசையிலுள்ள கைலாயத்தை அடையும் போது நீ குணமடையப் பெறுவாய் என அருள் செய்து மறைந்தார்.

நக்கீரர், தமிழ் தெய்வமான முருகனின் துணை நாடி அவரைப் பற்றி பாடல்கள் பல புனைந்து வடக்கு நோக்கிச் செல்லலானார். முதலில் திருப்பரங்குன்றத்தில் முருகப் பெருமானை தர்சித்து அவர் ஆறுபடை வீடுகளைக் குறிக்கும் 'திருமுருகாற்றுப்படை' என்னும் நூலை இயற்றினார். பேயினால் பிடிக்கப்பட்ட ஒருவனை அதனின்று விடுத்து அவனை ரக்ஷித்தார். ஒரு ஆலமரத்தின் கீழ் அமைந்துள்ள குளத்தினை கடக்கும் போது மரத்திலிருந்து குளத்தில் விழும் இலைகள் எல்லாம் மீன்களாக மாறின. தரையில் விழுந்தவை அனைத்தும் பறவைகளாக மாறின. பாதி நீரிலும், பாதி தரையிலும் விழுந்த இலை சிறிது நேரம் மீனாக மாறி பின்னர் பறவையாகி பறந்து போயிற்று. இந்த அதிசயக் காட்சியினைக் கண்ட நக்கீரர் மெய் மறந்து போனார். இக்காட்சியே 'அவர் கைலை

பாதி, காளத்தி பாதி' என்னும் அந்தாதி இயற்ற காரணமாக இருந்தது. தனது குருவான குஹன் வழிகாட்டியபடி பல புனிதத் தலங்களுக்குச் சென்று அங்கு உறைந்திருக்கும் இறைவனைப் பற்றி தனக்கு பீடிக்கப்பட்ட குஷ்ட ரோஹத்தினையும் மறந்து புகழ்ந்து பாடலானார்.

சிவகுமாரன் நக்கீரருக்கு அருள் செய்ய விரும்பினார். அவர் அக்குளத்தில் நீராடுவதற்காக நீரில் மூழ்கி எழும் போது தான் ஸ்வர்ணமுகி நதியில் இருக்கக் கண்டு தன் எதிரில் உள்ள தக்ஷிண கைலாய மலையை தர்சித்த மாத்ரத்திலேயே ஆச்சர்யம் அடைந்தவராய் தனது குஷ்ட ரோஹம் முற்றும் நீங்கக் கண்டு அதிசயித்து மனம் குளிர்ந்து தக்ஷிண கைலாய மலையை நோக்கிச் சென்று வாயுலிங்கத்தை தர்சிக்கும் பாக்யம் பெற்றார். தக்ஷிண கைலாய மலையின் சிறப்பையும் திருக்காளத்தீஸ்வரரின் பெருமைகளைப் பற்றியும் அவர் பாடியுள்ள 'கைலை பாதி, காளத்தி பாதி' என்னும் அந்தாதி அடியார்கள் அனைவருக்கும் அழியாத பொக்கிஷமாக விளங்குகிறது. 'கைலை மலைவாழ் அர்தநாரீஸ்வரருக்கு, நெய் சட்டியாகவும், சப்தம் திரியாகவும், பாட்டின் பொருள் நெய்யாகவும் இருக்கும். 'வெண்பா' என்னும் தீபத்தினை ஏற்றுகின்றேன்' என பாடினார்.

இறைவனால் அளிக்கப்பட்ட சாபம் கூட தனக்கு வரப்ரசாதமாகவே ஆகியது என்பதை உணர்ந்த அவருக்கு இறைவன் திருஞானப்ரஸூனாம்பிகையோடு கூடிய திருக்காளத்தீஸ்வரராகக் காட்சியளித்தார். பக்திப் பரவசத்தால் துவண்டு போன நக்கீரர் பெருமான், தன் நாதனை ஸாஷ்டாங்கமாக வணங்கி ஆராதித்து வழிபட்டார். பின்னர் தன் வாழ்க்கையின் இறுதி நாட்களை அவ்விடத்திலேயே கழித்து சிவலோக ப்ராப்தி அடைந்தார்.

(திருக்காளத்தி கோவிலின் கிழக்கு புறமாக தக்ஷிண கைலாய மலைச் சரிவில் உள்ள கோவிலில் நக்கீரர், 'சித்துலய்யா' என்று நாமம் கொண்டு வணங்கப் பெறுகின்றார்.)

அத்யாயம் - 36

# திருக்காளத்தி தலமும், ராஹு கேது க்ரஹங்களும்

நாம் வசிக்கும் இந்த பூமியிலிருந்து வெகு தொலைவில் ஒளி மிகுந்த க்ரஹங்களும், நக்ஷத்ரங்களும் இருப்பது ஸாதாரணமாக எல்லோரும் அறிந்த விஷயமே. பண்டைக்காலத்திய வான சாஸ்த்ர நிபுணர்களும், தற்காலத்திய விஞ்ஞானிகளும் செய்து வரும் ஆராய்ச்சியின் பயனாக, இந்த விண்வெளி மண்டலங்களின் அமைப்பும், அவைகளினால் பூமியில் ஏற்படும் பாதிப்பும், தெரிய வருகின்றன. ஸூர்யன், க்ரஹங்களின் அரசனாகக் கருதப்படுகிறான். க்ரஹங்கள் முக்யமாக ஒன்பது என்றும், எண்ண முடியாத நக்ஷத்ர மண்டலங்களில் முக்யமானவை இருபத்தேழு என்றும், வேதத்தில் உள்ள மந்திரங்களாலும், சாஸ்த்ரங்களாலும் நாம் தெரிந்து கொள்கிறோம்.

ஸூர்யன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்ரன், சனி என ஏழு க்ரஹங்களும் நிழல் க்ரஹங்கள் எனப்படும். ராஹுவும், கேதுவும் சேர்ந்து நவக்ரஹங்கள் எனப்படும். இவையாவும் பூமியுடன் எப்போதும் சுழன்று கொண்டே இருக்கின்றன. இவைகள் சுழலும் பாதையில் இருபத்தேழு நக்ஷத்ரங்களும் இருக்கின்றன. ஸூர்யனின் ஒரு சுற்று ஒரு வருட காலமும், சந்திரனின் ஒரு சுற்று இரண்டு பக்ஷங்கள் கொண்ட ஒருமாதமாகவும் கணக்கிடப்படுகிறது. சனியின் ஒரு சுற்று முப்பது வருட காலமாகும். குருவின் ஒரு சுற்று பன்னிரெண்டு வருடங்கள், மற்ற க்ரஹங்களில் ராஹுவும், கேதுவும் ஒன்றரை வருட காலத்தில் ஒரு சுற்றை முடிப்பர். செவ்வாய், புதன், சுக்ரன் இவர்களின் ஸஞ்சாரம் அவ்வப்போது மாறும். ஏழு க்ரஹங்களும் ப்ரதக்ஷிணமாக சுற்றி வரும் போது ராஹுவும், கேதுவும் மட்டும் அப்ரதக்ஷிணமாக சுற்றி வருகிறார்கள். இந்த க்ரஹங்களின் ஸாரம் கோட்ஸாரம் எனப்படும். எந்தெந்த காலத்தில் இவை எங்கெங்கு இருக்கின்றன என்பது கணக்கிடப்பட்டு பஞ்சாங்கங்களில் எழுதப்பட்டுள்ளது. இந்த கோள்கள் பூமியின் சுழற்சியில் ஏற்படுத்தும் பாதிப்புகளால் பஞ்சம், பூகம்பங்கள், வெள்ளம் முதலிய சீர்கேடுகள் அவ்வப்போது ஏற்படுகின்றன. தங்கள் ஸஞ்சாரத்திற்கு ஏற்ப இந்த க்ரஹங்கள் பூமியை முழுவதாக பாதிப்பதோடல்லாமல் தனிப்பட்ட மனிதரின் வாழ்க்கையையும் பாதிக்கின்றன. ஒருவர் பிறக்கும் காலம், தேசம்,

திதி, வாரம், நக்ஷத்ரம் இவைகளும், பிறக்கும் சமயம் உள்ள க்ரஹ நிலையையும் பொருத்து அவரது வாழ்க்கை அமைகிறது என்பது ஜோதிஷ சாஸ்த்ரம் மூலம் நாம் தெரிந்து கொள்கிறோம்.

தனக்கென்று ராசி சக்ரத்தில் வீடில்லாமல் இருக்கும் சாயா க்ரஹங்கள் எனக் கூறப்படும் ராஹுவும், கேதுவும் மனித வாழ்வில் ஏற்படுத்தும் பாதிப்புகள் பலவிதமானவை. ராஹுவைப் போல் கொடுப்பார் இல்லை. கேதுவைப் போல் கெடுப்பார் இல்லை என்று வசனம் உண்டு. இவ்விருவரும் ஒருவர் ஜாதகத்தில் இருக்கும் ராசியையும், அந்த ராசிநாதனையும் பொருத்தும், இவர்கள் எந்த க்ரஹங்களின் பார்வை பெறுகிறார்கள் என்பதை பொருத்தும் இவர்கள் கொடுக்கும் பலன்கள் மாறுபடுகின்றன. அனேகமாக நல்ல இடங்களில் அமையாவிடில் இவற்றால் அதிகக் கெடுதல்கள் ஏற்படுகிறது என்பது திண்ணம்.

நவக்ரஹங்களிலே சனியை விட செவ்வாயும், செவ்வாயை விட புதனும், புதனை விட குருவும், குருவை விட சுக்ரனும், சுக்ரனை விட சந்திரனும், சந்திரனை விட ஸுர்யனும், இவர்கள் அனைவரையும் விட ராஹுவும், கேதுவும் பலம் பொருந்தி விளங்குகின்றனர். சந்திர, ஸுர்யரையும் பலம் இழக்கும் படி, ஒளி இழக்கும் படி செய்ய இவர்களுக்கு ஆற்றல் உண்டு. ஒருவர் ஜாதகத்தில் ராஹு நல்ல நிலையில் இருந்தால் அவர்களை அரசனைப் போல உயர்த்தி விடுவானாம். ராஹு நல்ல குடும்பம், செல்வாக்கு, அந்ய மொழிகளில் தேர்ச்சி இவற்றை எல்லாம் தருபவன். ஆனால் ராஹு தோஷம் உடையவர்கள், மிகவும் கடுமையான பலன்களை சந்திக்க வேண்டியவர்களாய் இருக்கின்றனர். விவாஹ தாமதம், களத்ர தோஷம், புத்ர தோஷம் இவற்றுக்கு காரணமாய் இருக்கிறார்கள். ஒருவருடைய ஜாதகத்தில் கேது பலம் பெற்றிருந்தால் இக, பரம் இரண்டிலும் உள்ள ஸுகங்களை அனுபவிக்கச் செய்வான். சிவபக்தனான கேது தபஸ், த்யானம் முதலியவற்றில் ஈடுபடுத்துபவனாகவும், உலக பந்தங்களிலிருந்து விடுவிப்பவனாகவும் அதே சமயம் ஸகல ஸௌபாக்யங்களையும் அளிப்பவனாயும் விளங்குவான். ஜாதகத்தில் கேது நீசகமாக, பலஹீனனாக இருந்தால் மன நோய், விபத்துக்கள், தீய சேர்க்கை போன்ற பலவித கெடுதல்கள் ஏற்படும்.

ராஹு, கேது இவற்களால் ஒரு ஜாதகருக்கு ஏற்படும் கெடுதலான பாதிப்புகள் நீங்க ராஹு, கேது ஸ்தோத்ரங்களை சொல்வதும், ராஹுகாலத்தில் துர்கையம்மனை வழிபடுவதும் உண்டு. திருநாகேஸ்வரம் என்னும் இடத்தில் இவ்விருவருக்கும் தனித்தனி ஸந்நிதிகள் இருப்பதால் அங்கும் சென்று வழிபட்டு நாகநாத ஸ்வாமியை வணங்கி வருவதும் உண்டு.

ஸ்ரீ காளஹஸ்தி க்ஷேத்ரத்தில் காளஹஸ்தீஸ்வரரை தர்சனம் செய்தாலே ராஹு, கேதுக்களால் ஏற்படும் கஷ்டங்கள் சீக்ரமே விலகுகின்றது என்பது அனேகர்களின் அனுபவம். ஸ்வயம்பு மூர்த்தியான காளஹஸ்தீஸ்வரரின் மேனியிலேயே சிலந்தியும், யானையும், ஸர்பமும் உண்டு. இவை யாவும் வழிபட்ட, சிவபெருமானின் லிங்க வடிவான காளத்தீஸ்வரரின் தர்சனம் எண்ணற்ற பக்தர்களுக்கு நன்மை பயக்கின்றது.

லக்னத்தில் கேதுவும், ஏழில் ராஹுவும் ஜாதகத்தில் அமைந்துள்ள பெண்களின் திருமணம் தடைபட்டுக் கொண்டே வருவதும், காளத்தீஸ்வரரையும், காளஹஸ்திக் கோவிலில் வீற்றிருக்கும் பாதாள விநாயகரையும் தர்சனம் செய்து வந்த பின் திருமணம் நிச்சயமாவதையும் நாம் பார்க்கிறோம். அநேக விதமாக ஹோமங்களும், சாந்திகளும் ராஹு, கேது தோஷ பரிஹாரமாக விதிக்கப்பட்டிருந்தாலும் இவற்றை விதிப்படி செய்ய முடியாத தற்கால சூழ்நிலையில் பக்தியுடன் காளத்தீஸ்வரரையும், பாதாள விநாயகரையும் தர்சனம் செய்து வணங்கி வருவது ஸுலபமாக யாவரும் செய்யக் கூடியதாகும். காளஹஸ்தீஸ்வரரின் மூர்த்தியை நவக்ரஹ கவசத்துடன் தான் தர்சிக்க முடியும். விரைவில் அருள் புரியும் சிவபெருமானை வழிபடுவது ஸுலபம். தும்பை பூவினாலும், வெள்ளெருக்கு புஷ்பத்தாலுமே ஸந்தோஷப்படக் கூடிய காளஹஸ்தீஸ்வரரின் அனுக்ரஹம், நவக்ரஹங்களால் முக்யமாக, ராஹு, கேதுஇவர்களால் ஏற்படும் கெடுதல்களைப் போக்கி எல்லா நன்மைகளும் செய்து வருவது பக்தர்கள் அறிந்த விஷயம். ஸர்பத்தின் தலையுடன் கூடிய கேதுவும், ஸர்பத்தின் உடலுடன் கூடிய ராஹுவும் பரமசிவனை வழிபட்டு நிழல் க்ரஹங்களாக திகழ்ந்து ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் இருபத்தைந்து வருடங்களை நடத்திச் செல்கின்றன. ராஹு தசை பதினெட்டு வருடங்கள். கேது தசை ஏழு வருடங்கள். காளஹஸ்தீஸ்வரரை இவர்கள் வழிபட்டு அவரது உடலிலேயே

ஸ்தானம் பெற்றிருப்பதால் காளஹஸ்தீஸ்வரரின் தர்சனம் இவர்களால் ஏற்படும் கெடுதலான பாதிப்புகளை நீக்குகிறது. பாதாள விக்னேஸ்வரரின் வழிபாடும் காளஹஸ்தீஸ்வரரின் தர்சனமும், ஞானப்ரஸூனாம்பாளின் அருளும் எல்லோருக்கும் கிடைக்கக் கூடியவை. கண்ணப்பருக்கு அருள் செய்த காளஹஸ்தீசனின் மஹிமையால் ராஹு, கேதுக்களுடைய தீய பலன்களிலிருந்து விடுபட்டு எல்லோரும் ஸுகமடையலாம்.

இக்காளஹஸ்தி தலத்தில் ராஹு, கேது தோஷங்கள் நீங்குவதற்காக விசேஷமான பூஜைகள் செய்வதற்கு அனேக வசதிகள் உள்ளன. ஸர்ப தோஷத்தால் குழந்தைகள் இல்லாதிருப்பவர்களும், விவாஹம் தடைபட்டு வருபவர்களும், விவாஹத்திற்குப் பிறகு கணவன், மனைவி உறவு சரியில்லாமல் கவலைப் படுபவர்களும், குடும்ப சச்சரவுகளால் மன அமைதி இல்லாதிருப்பவர்களும் இத்தலத்தினில் பாதாள விநாயகர், ஞானப்ரஸூனாம்பாள், ஸ்ரீ காளஹஸ்தீசர் இவர்களை வழிபட்டு எல்லாவித நன்மைகளும் பெற்று வருகிறார்கள். இவ்வுலகிற்கு வேண்டிய பொருள் அனைத்தையும், பரலோகத்தில் மோக்ஷத்தையும் இவ்வழிபாடு எல்லோருக்கும் அருள்கிறது என்பதில் ஐயமில்லை.

முற்றிற்று

## ABOUT THIS BOOK

Srikalahasti is an ancient place mentioned extensively in Puranas. The enchanting Kailasa Peak, the north-flowing Swarnamukhi and the Swayambhu Vayu Linga make this place unique. Its historical background runs to ages and it has been sung by Saivite Saints like Appar, Sambhandar, Manickavasagar and Sundarar.

Srikalahasteeswara is an ocean of mercy who unhesitatingly grants boons to His devotees. There are several legends about this place; one of which states that the nameless and formless Easwara blessed a spider, a serpent and an elephant by assuming symbols of their forms and accepting their names. The crude form of worship by a hunter was ignored and the depth of his devotion alone was taken into account resulting in his being given the highest place. A lady named Neela was redeemed from a ghost which haunted her. The poet Bheema regained his speech, the celebrated Tamil Poet Nakkeerar's dreaded disease was cured and the Andhra Kavi Dhurjati gained tranquillity – and all of them sung in praise of the Lord in exquisite poetry. There are many more legends.

As centuries rolled by, the temple rose with majestic walls, imposing towers and inspiring sculptures. The Pallavas, Tondamans, Cholas, Yadavas, Vijayanagar Kings and Nattukotai Chettiars were the builders. Pallava carvings in Kailasagiri and Nataraja Rangasthala exhibit very rare bas-reliefs.

Among the Panchabhuta Kshetras, it is dedicated to element of Vayu and among the Navagraha places, it is dedicated to RAHU and KETU. The present administration is doing its best to provide facilities to the thousands of pilgrims visiting this place. Special arrangements are made for Sarpa Shanti to the devotees seeking relief from the evil effects of Rahu and Ketu.

The efforts of Smt. Pavani Valli Satyam, hailing from the reputed Sabhapathy family of this place, in bringing out this book in Tamil, with devotion and authority, are commendable.

---

**SRIKALAHASTI MAHIMAI** (Tamil) Price Rs. 25
***By* Smt. Pavani Valli Satyam**